ஆண்ட ஷாங் மரபினர் மற்றும் 1125 ஆண்டில் ஆண்ட சௌ மரபினர் ஆட்சி காலத்தில் சீன நாகரிகம் வளர்ச்சியுற்றது. சௌ மரபினர் காலத்தில்தான் சீனாவின் புகழ்பெற்ற தத்துவஞானி கன்பூசியஸ் லாவோட்சே போன்றோர் வாழ்ந்தனர். சீன நாகரிகத்தை சிறப்புற செய்ததில் கன்பூசியஸின் பங்கு மகத்தானது. கிமு 249 சின் மாநிலத்தைச் சேர்ந்த ஷி "ஹுவாங் டி என்பவர் சீனாவெங்கும் தன் ஆதிக்கத்தை நிலை நாட்டினார். இவரே சீனாவின் முதல் பேரரசர் கருதப்படுகிறார். சின் மாநிலத்தைச் சேர்ந்த இவரது மரபு சின் எனப்பட்டது. இதிலிருந்துதான் அவர் ஆட்சி புரிந்த நாடு சீனா என்ற பெயரினைப் பெற்றது. புகழ்பெற்ற சீனப் பெருஞ்சுவரை கட்டியவரும் இவர்தான். எனவே கிமு மூன்றாம் நூற்றாண்டில் இருந்தே சீனாவின் வரலாறு தொடங்குகிறது. பல்வேறு துறைகளில் குறிப்பிடத்தக்க தொழில்நுட்ப முன்னேற்றங்கள் பண்டைய காலத்தில் நிகழ்ந்தன. கி.மு.221இல் சீனாவை ஒரு மையப்படுத்தப்பட்ட, நன்கு ஒழுங்கமைக்கப்பட்ட மாநிலமாக மாற்றுவதற்கு தொழில்நுட்பத்தின் இந்த புதிய முன்னேற்றங்கள் பெரிதும் காரணமாக இருந்தன. பண்டைய உலகின் பிற பகுதிகளிலிருந்து சீனா தனது நாகரிகத்தை முற்றிலும் சுதந்திரமாகப் பேணுவதை உறுதிசெய்யும் பொருளாதாரத் திறனை அவர்கள் வழங்கினர், இதனால், அவர்கள் உருவாக்க உதவிய கலாச்சார அமைப்பைப் பாதுகாத்தனர். கட்டிடம், தகவல் தொடர்பு, ஹைட்ராலிக்ஸ் மற்றும் உலோகம் ஆகியவற்றில் மேம்பாடுகள் இருந்தன.

**அரசவைப் பதிவேடுகளில் அறிவியல் செய்திகள்**

சீன அரசவை பதிவேடுகளில் இருந்து பல்வேறு அறிவியல் செய்திகள் காணக்கிடைக்கின்றன. சான்றாக கிமு 1361இல் கிரகணம் நிகழ்ந்ததாக பதிவுசெய்யப்பட்டுள்ளது. கிமு 1600 இல் வானில் வால் நட்சத்திரங்கள் தோன்றியதாக குறித்து வைத்துள்ளனர். கிபி 634இல் வால்நட்சத்திரத்தின் வாழ் பகுதி சூரியனை நோக்கி இருக்கும் என்ற அறிவியல் உண்மையை கண்டுபிடித்துள்ளனர். திடீரென விண்ணில் தோன்றிய வெடிக்கும் நட்சத்திரங்கள் பற்றிய குறிப்புகளையும் அதில் காணலாம். இரவும் பகலும் சமமாக இருக்கும் நாட்கள் பற்றிய சரியான தகவலை அறிந்திருந்தனர். விண்மீன்கள் பற்றிய அட்டவணையை ஷி சென் என்ற சீனர் கி.மு.350இல் தயாரித்திருந்தார். சூரிய ஆண்டு 365.25

நாள் என்றும் சந்திரன் மாதம்29.5 என்றும் அறிந்திருந்தனர். எனினும் வாரத்திற்கு 10 நாட்கள் எனக் கணக்கிட்டனர். செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி ஆகிய கிரகங்களை அறிந்திருந்தனர். அவைகளை பஞ்சபூதங்களாக கருதினர். நட்சத்திரங்களில் முறையான அட்டவணையை தொகுத்து வைத்திருந்தனர்.

**கணிதம்**

சீனர்கள் கணிதத்திலும் சிறந்து விளங்கினர். எண்களை எழுதுவதில் கிமு மூன்றாம் நூற்றாண்டிலேயே சீனர்கள் சிறந்த நிலையை அடைந்திருந்தனர். எண்களை எழுதும் முறையை எளிமையாக்கினர். பூஜ்ஜியத்தை ஒரு வெற்றிடம் விடுவதன் மூலம் குறிப்பிட்டனர். பெரிய எண்களைக் கூட்ட எளிமையாக குறிப்பிட்டனர். எண்களை குறிப்பிடவும் கணக்கிடவும் எண்ணிக்கையை பலகைகளை பயன்படுத்தினர். சீனர்கள் ஒற்றைப்படை எண்கள் அதிர்ஷ்டம் இல்லாதவை என்றும் இரட்டைப் படை எண்களை அதிர்ஷ்டம் வாய்ந்தவை என்றும் நம்பினர். பழைய கணிதம் அவர்களுக்கு தெரிந்திருந்தது. கணக்கிடும் கருவி கண்டுபிடித்தனர். ஒரு நீண்ட சதுர சட்டத்தில் மேலும் கீழுமாக கம்பிகளை வைத்து கட்டினர். ஒவ்வொரு கம்பிகளில் ஏழு சுற்று பருமனான உருண்டைகள் இருக்கும் இதனை கணக்கிடுவதற்கு பயன்படுத்தினர். சில கணக்குகளை பதிவு செய்ய நூல்களில் முடிச்சுகள் இடும் முறையைக் கையாண்டனர். சீனர்களின் பரர்கட்டை அபாகஸ் என்று அழைக்கப்பட்டது. சீனர்கள் அல்ஜீப்ராவில் அதிக நாட்டம் கொண்டிருந்தனர். பை என்ற குறியீட்டின் மதிப்பை துல்லியமாக கண்டறிந்தனர்.

**ரசவாதம்**

உலோகங்களை தங்கமாக மாற்றும் முறை ரசவாதம் என்று பெயர். பண்டைய சீனாவில் ரசவாதம் சிறப்புற்று விளங்கியது. மனிதனின் வாழ்நாளை நீடிக்கச் செய்யும் காயகல்ப கண்டுபிடிப்பதில் சீனர்களுக்கு உள்ள ஆர்வம் ரசவாத கலை வளர்ச்சிக்கு வித்திட்டது. இரசவாதத்தில் தலை சிறந்தவர் கோ ஹுங் ஆவார். அந்த அற்புத காயகல்ப சக்தியை தங்கத்திலிருந்து பெறமுடியும் என்று கருதியதால் தங்கம் உற்பத்தி செய்யும் திறன் வளர்ச்சி அடைந்தது. தாதுப் பொருட்களில் இருந்து பெறும் அமிலத்திற்கு காயகல்ப சக்தி உண்டு என்று தவறாக கருதினர்.

அதனால் அதனை உண்ட 17 க்கும் மேற்பட்ட சீனப் பேரரசர்கள் உயிரிழந்துள்ளனர். மேற்கத்திய நாடுகளிலும் இந்த ரசவாத மோகம் இருந்தது. ஆனால் அது நாளடைவில் வளர்ச்சிக்கு வழிவகுத்தது. ஆனால் சீனாவில் அவ்வாறு வேதியல் வளரவில்லை. பழங்கால சீன அரசர்கள் நீண்ட நாட்கள் வாழ விரும்பி இரசவாத முறையை ஊக்குவித்தனர்.

**மருத்துவம்**

பழங்கால சீனர்கள் மருத்துவத்துறையில் சிறந்து விளங்கினர். மருத்துவப் பட்டம் பெறுவதற்கு தேர்வு முறை இருந்தது. மருத்துவ பல்கலைக் கழகங்கள் ஏற்படுத்தப்பட்டன. சீன மருத்துவம் தொடக்ககாலத்தில் லாவோட்செயின் தாவோயிசக் கோட்பாட்டின் அடிப்படையில் வளர்ச்சி அடைந்தது. அதன்படி இந்த உலகமே ஒன்றுக்கொன்று முரணான இரண்டு சக்திகளை அடிப்படையாகக் கொண்டது. ஒன்று பிரகாசமான ஈரமற்ற ஆண்மை தன்மை கொண்டது என்றும் மற்றொன்று இருளான ஈரமான பெண் தன்மை கொண்டது என்றும் கூறப்பட்டது. சீன மருத்துவர்கள் நாடித்துடிப்பை மட்டும் நம்பி இருக்காமல் நாக்கின் நிறம், வாய்துர்நாற்றம், இதயத்துடிப்பு ஆகியவற்றையும் கவனித்து பார்த்து தான் சிகிச்சை அளித்தனர், கிபி இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹுவதோ புகழ்பெற்ற பண்டைய சீன மருத்துவர் ஆவார். இவர் மயக்க மருந்து கொடுத்து பல அறுவை சிகிச்சைகளை வெற்றிகரமாக செய்தார். சீனா இந்த உலகிற்கு அளித்த முக்கிய மருத்துவ கொடை அக்குபஞ்சர் ஆகும். இந்த முறை சீனாவில் கிமு 5ஆம் நூற்றாண்டளவில் தோன்றியது. மனிதனுக்கும்உலகியல் பொருட்களுக்கும் இடையில் நெருங்கிய தொடர்பு இருக்கிறது என்ற அடிப்படையில்தான் இந்த மருத்துவமுறை தோன்றியது. உடலில் அதிகமாக இருக்கும் திரவங்களின் வெளியேற்றமும் அதனால் ஏற்படும் உடல்நலக் குறைவை போக்க தோளில் துளையிடும் முறைதான் அக்குபங்சர் முறையாகும். உடலில் 22 இடங்களில் அக்குபஞ்சர் முறையை செயல்படுத்தி குணப்படுத்த முடியும். பழங்கால சீன மருத்துவர்கள் ஒருவகையான மூலிகை இருப்பின் மூலமாக சில நோய்களை குணமாக்கினர். பருவ காலங்களில் நோய்கள் வருவதாக நம்பினர். வசந்தகாலத்தில் நரம்பு சம்பந்த நோய்களும் தலைவலியும்

கோடையில் தோல் சார்ந்த நோய்களும் இலையுதிர் காலத்தில் காய்ச்சலும் குளிர்காலத்தில் தோல் நோய்களும் வருவதாகக சீனர்கள் கருதினர்.

**தொழில்நுட்ப வளர்ச்சி**

**மண்பாண்டம் மற்றும் பீங்கான்கள்**

பண்டைய கால சீனர்கள் மட்பாண்டம் தயாரிப்பதற்கு சிறந்த தொழில்நுட்ப அறிவைப் பெற்றிருந்தனர். மேலும் அழகிய வேலைப்பாடுகள் உடைய பீங்கான் பாத்திரம் செய்வதையும் அவர்கள் சிறந்து விளங்கினர். தொல்லியல் ஆய்வில் கிமு 2500 க்கும் மேற்பட்ட வண்ணம் பூசப்பட்ட வருடங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மிகவும் இலேசான பளபளப்புடன் கூடிய இந்த பீங்கான் பாத்திரங்கள் பழங்கால சீனத் தொழில்நுட்பத்தினை விளக்குகின்றன. அதுபோல சீனர்கள் பீங்கான் பாத்திரங்களில் செய்வதிலும் சிறந்து விளங்கினர். அவர்களின் பீங்கான் பாத்திரங்கள் காகிதத்தை போல் மெல்லியதாகவும் கண்ணாடியைப் போல் வழ வழப்பாகவும் இருந்தன. கிமு ஆறாம் நூற்றாண்டு காலத்தில் சீனர்கள் கண்ணாடி உற்பத்தி செய்யத் தொடங்கினர்.

**வெடிமருந்து**

சீனர்கள் இந்த உலகிற்கு அளித்த மிகப்பெரிய கொடை வெடி மருந்து ஆகும். அவருடைய கண்டுபிடிப்புகளில் தலை சிறந்த கண்டுபிடிப்பாக இது கருதப்படுகிறது. இந்த வெடிமருந்து கந்தகம், வெடி, உப்பு, கரி ஆகியவைகளை கலந்து வெடிமருந்து செய்யும் முறையை அவர்கள் அறிந்திருந்தனர்.

**காகிதம் மற்றும் அச்சுக்கலை**

இந்தியாவில் முதல் நூற்றாண்டில் பட்டினால் செய்த காகிதம் பயன்படுத்தப்பட்டது. அடுத்த நூற்றாண்டில் முறையான காகிதம் செய்யும் தொழில் நுட்பத்தின் படி காகிதம் செய்ய தொடங்கினார். மரப் பட்டை, சனல் ஆகியவற்றை கொண்டு காகிதம் செய்தனர் . காகிதம் செய்ததோடு மை தயாரிக்கும் நுட்பத்தையும் அறிந்திருந்தனர்.பாதரச சல்பேட் கலவையால் தயாரிக்கப்பட்ட மையைக் கொண்டு பட்டுத்துணியில் எழுதினர். கிபி மூன்றாம் நூற்றாண்டில் சீனாவில் பேப்பர்

கண்டுபிடிக்கப்பட்டது. பைன் மரத்தின் பசையில் இருந்து தயாரிக்கப்பட்ட நீல மை கண்டுபிடிக்கப்பட்டது. தவிர சீனர்கள் இடையே நில படம் வரையும் கலை வளர்ச்சி அடைந்திருந்தது. கிபி 300 சீனர்கள் உலக வரைபடம் வரைவதில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தனர்.

சீனர்கள் உலக மக்களுக்கு கற்றுக் கொடுத்த மற்றுமொரு தொழில்நுட்பவியல் அச்சுக்கலை ஆகும். சைலோகிராபிக் என்ற புதுமையான அச்சுப்பொரியை சீனர்கள் கண்டுபிடித்தனர். அதன் மூலம் பல நூல்களை அவர்கள் அச்சிட்டனர். ஒரு லட்சம் பிரதிநிதிகளைக் கொண்ட நூலகமும் அரசர்களால் ஏற்படுத்தப்பட்டது.

**திசை காட்டும் கருவி**

காந்த ஊசியை கொண்டு இவர்கள் திசை காட்டும் கருவி கண்டுபிடித்தனர். இது சீனர்கள் அறிவியல் தொழில்நுட்பத்துறையில் சிறந்து விளங்கினர் என்பதற்கு எடுத்துக்காட்டாகும் கிமு மூன்றாம் நூற்றாண்டிலேயே சீனர்கள் திசைகாட்டும் கருவியை கண்டறிந்திருந்தனர். ஆனால் ஐரோப்பியர்கள் 15ஆம் நூற்றாண்டில்தான் அதனைக் கண்டறிந்தனர்.

**மெருகு மற்றும் சாயத்தொழில்**

பண்டைய சீனாவில் மெருகு மற்றும் சாய தொழில்கள் சிறந்து விளங்கின. ரூஸ்வெர்நிசிபெரா என்ற ஒருவகை மரத்தில் இருந்து சேகரிக்கப்பட்ட பசையைக் கொண்டு மெருகு தயாரித்து மண் பீங்கான் பாண்டங்கலுக்கு மெருகு ஏற்றினர். மேலும் துணி உற்பத்தியில் முன்னோடிகளாக விளங்கினர். சைனா சில்க் என்பது மிகவும் பிரசித்தி பெற்றதாகும். கிரேக்கர்களும் ரோமானியர்களும் சீனாவில் செய்யப்பட்ட துணிகள் மீது அதிக விருப்பம் கொண்டிருந்தனர். துணியில் சாயம் சேர்த்தனர் பல நிறங்களில் அழகிய ஓவியங்களை ஆடைகளில் வரைந்தனர்.

**கலை கட்டிடக்கலை**

பழங்கால சீன கட்டிடங்கள், கற்கள், மரம், செங்கல் மற்றும் களிமண் ஆகியவைகளால் கட்டப்பட்டன. கட்டிடத் தொழில் நுட்பத்திலும் சீனர்கள் சிறந்து விளங்கினர். சீனப்பெருஞ்சுவர் கட்டிடக்கலைக்கு சிறந்த உதாரணமாக திகழ்கிறது. இது உலகின் மிக நீளமான சுவர் ஆகும்.

இதன் நீளம் 2410 கிலோமீட்டர் ஆகும். சீனாவின் வடமேற்கு பகுதியில் இருந்து படையெடுத்து வரும் முரட்டு இனத்தவரிடம் இருந்து சீனாவை பாதுகாப்பதற்கு பேரரசன் ஷிஃஹுவாங் கட்டிய மதில் சுவர் உலக அதிசயங்களில் ஒன்றாக கருதப்படுகிறது. சீனப் பெருஞ்சுவரின் உயரம் 8 மீட்டர் ஆகும். ஒவ்வொரு 200 மீட்டர் இடைவெளியில் 1 முதல் 11 மீட்டர் உயரமுடைய சிறு கோபுரங்கள் கட்டப்பட்டுள்ளன. சுவரின் அடிப்பகுதி அகலமாகவும் மேற்பகுதியின் அகலம் 5 மீட்டர் இடைவெளியில் மண் செங்கல் கருங்கல் ஆகியவற்றை நிரப்பி அதேபோல் செய்துள்ளனர். சுவரின் மேல் உள்ள பாதை குதிரை வீரர்கள் செல்வதற்கு ஏற்றவாறு அமைக்கப்பட்டுள்ளன. சீனப்பெருஞ்சுவர் பல்வேறு அரச வம்சங்களின் ஆட்சியில் பல ஆண்டுகளாக கட்டப்பட்டது. நூறு ஆண்டுகளுக்கும் அதிகமாக ஆனதாக கருதப்படுகிறது. இவற்றின் சில பகுதிகள் கிமு நான்காம் நூற்றாண்டிலேயே எழுப்பப்பட்டன. ஷிஃஹுவாங் என்பவர் தனித்தனியே நின்ற சுவர்களை இணைக்கும் இணைப்பு சுவர்களைக் கட்டினார். சூய் மரபு காலத்தில் சீனப் பெருஞ்சுவரின் நீளம் மேலும் விரிவு படுத்தப்பட்டது. மிகப்பெரிய விரிவு மிங் வம்ச காலத்தில் நிகழ்ந்தது. சீன நாகரிகத்தில் கல் மற்றும் வெண்கலத்தால் ஆன பல சிலைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. டாங் வம்சத்தை சேர்ந்த தெய்வங்களை சித்தரிக்கும் பல சிற்பங்கள் உள்ளன. மேலும் நடன மங்கையர், போர்வீரர்கள் ஆகியோரின் சித்திரங்களும் அந்த காலத்திய ஆடைகளையும் அலங்காரங்களையும் பற்றி அறிய உதவுகின்றன. இந்த கலைநயமிக்க சிற்பங்கள் மக்களின் மத நம்பிக்கைகளையும், விளையாட்டு, போர்க்களங்கள் ஆகிய காட்சிகளையும் பிரதிபலிப்பதாக அமைந்துள்ளன.

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கவும்**

5. சீனப் பெருஞ்சுவரைக் கட்டியவர் யார்?
6. புகழ்பெற்ற பண்டைய சீன மருத்துவர் யார்?

## 3.7 உங்கள் முன்னேற்றக் கேள்விகளைச் சரிபார்க்க பதில்கள்

1. விஞ்ஞானம் மற்றும் தொழில்நுட்பத்தின் முன்னேற்றம் இந்த காலகட்டத்தின் மிகவும் குறிப்பிடத்தக்க அம்சமாகும். குப்த

ஆட்சியாளர்களின் ஆதரவின் காரணமாக, நாடு கல்வி, அறிவியல் மற்றும் தொழில்நுட்பம், கலை மற்றும் கட்டிடக்கலை போன்ற பல்வேறு துறைகளில் புகழ்பெற்ற அறிஞர்களை உருவாக்கியது. இந்த காலகட்டத்தில் அவர்கள் தங்கள் உயரத்தின் உச்சத்திற்கு உயர்ந்தனர். எனவே, குப்தர்களின் காலம் பண்டைய இந்தியாவின் பாரம்பரிய காலம் அல்லது பொற்காலம் என்றும் அழைக்கப்படுகிறது.

2. கணிதத்தை அறிவியலின் ஒரு தனிப் பாடமாகக் கருதியவர் ஆர்யபட்டா. முதல் 9 எண்களின் இட மதிப்பின் முதன்மைகளைக் கண்டுபிடித்ததும், கணிதக் கணக்கீடுகளை எளிமையாக்கி, இந்தத் துறையில் புரட்சியை ஏற்படுத்திய 'பூஜ்ஜிய'த்தைப் பயன்படுத்துவதும் அவரது மிக முக்கியமான சாதனையாகும். அவர் "பை"க்கு ஒரு மதிப்பைக் கொடுத்தார், 3.1416, அவருக்கு முன் பரிந்துரைத்ததை விட மிகவும் துல்லியமானது. சூரிய வருடத்தின் நீளத்தை 365.3586805 நாட்களாகக் கணக்கிட்டார்.

3. ஆர்யபட்டா இந்தியாவின் வானியல் அறிவியலின் தந்தை என்று அறியப்படுகிறார்.

4. பின்வரும் ஐந்து காற்றுகள் (வாயு) உடல் செயல்பாடுகளை பராமரித்தன:

(i) உதானா (தொண்டையில் இருந்து வெளிப்பட்டு பேச்சை உண்டாக்குகிறது)

(ii) பிராணன் (இதயத்தில் மற்றும் சுவாசம் மற்றும் உணவை விழுங்குவதற்கு பொறுப்பு)

(iii) சமனா (வயிற்றில் நெருப்பை மூட்டுவது, உணவைச் சமைத்து, செரிக்கச் செய்து, செரிக்கக்கூடிய மற்றும் செரிக்க முடியாத பாகங்களாகப் பிரிக்கிறது)

(iv) அபானா (வயிற்றில் மற்றும் வெளியேற்றம் மற்றும் இனப்பெருக்கத்திற்கு பொறுப்பு)

(v) வியானா (இரத்தம் மற்றும் உடலின் இயக்கத்தை ஏற்படுத்தும் பொதுவாக செயலிழந்த காற்று)

5. சீனாவை பாதுகாப்பதற்கு பேரரசன் ஷி"ஹவாங் கட்டிய மதில் சுவர் உலக அதிசயங்களில் ஒன்றாக கருதப்படுகிறது

6. கிபி இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹுவதோ புகழ்பெற்ற பண்டைய சீன மருத்துவர் ஆவார்.

குறிப்பு

## 3.8 சுருக்கம்

- இந்தியாவில் கிமு 3000 ஆண்டளவில் சிந்து சமவெளி பகுதியில் சிறந்ததொரு நாகரிகம் செழித்து வளர்ந்தது.

- ஹரப்பா, மொஹெஞ்சாதரோ போன்ற இடங்களில் அகழ்வாய்வு செய்த போது அங்கு திட்டமிட்டுக் கட்டப்பட்ட நகரங்கள் இருந்தன.

- சுட்ட செங்கற்களால் கட்டப்பட்ட வீடுகள், குடிநீர் வசதிகள், பாதாள சாக்கடை திட்டம், துணி நெசவு, உலோக சிற்பங்கள் போன்றவை அவர்கள் அறிவியல் அறிவிற்கு சான்று பகர்கின்றன.

- குப்தப் பேரரசின் கீழ் இந்தியா அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்தில் விரிவான சாதனைகளை கண்டது.

- இந்த சகாப்தத்தின் சிறப்பம்சங்கள் இயங்கியல், இலக்கியம், தர்க்கம், கணிதம், வானியல், பொறியியல், கலை, மதம் மற்றும் தத்துவம் ஆகியவற்றில் சாதனைகள்படைக்கப்பட்டன.

- குப்தர் காலத்தில் உலோகவியல், வேதியியல் மற்றும் இயற்பியல் ஆகியவையும் வளர்ந்தன.

- ஆரியர்களின் வேதங்களில் பண்டைய இந்திய மருத்துவ முறைகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. வாயு, பித்தம் ஆகியவை தான் உடல் பிணிகளுக்கு காரணம் எனக் கருதினர்.

- குப்தர் காலத்தின் குறிப்பிடத்தக்க வானியலாளர்கள் மற்றும் கணிதவியலாளர்களில், ஆர்யபட்டா (கி.பி. 476-550) மிகவும் முக்கியமானவராக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளார்.

- பூமி உருண்டை வடிவமானது, அது தனது அச்சில் தானே சுழன்று கொண்டிருக்கிறது, அதனால் இரவுபகல் தோன்றுகிறது சந்திரன் இருள் தன்மை கொண்டது.

- மேலும் அது சூரியனிடமிருந்து தான் ஒளி பெறுகிறது, சூரிய சந்திர கிரகணங்கள் பூமி மற்றும் சந்திரனின் உடைய நிழல்கள் படிவதால் ஏற்படுகிறது.

- இதன் மூலம் ராகு என்ற பாம்பு விழுங்குவதால் தான் கிரகணம் ஏற்படுகிறது என்ற புராண நம்பிக்கை புறக்கணித்தார்.

- கணிதத்தை அறிவியலின் ஒரு தனிப் பாடமாகக் கருதியவர் இவரே.

- முதல் 9 எண்களின் இட மதிப்பின் முதன்மைக் கண்டுபிடிப்பு மற்றும் எண்கணிதக் கணக்கீடுகளை எளிதாக்கிய “பூஜ்ஜியத்தை“ பயன்படுத்தி, இந்தத் துறையில் ஒரு புரட்சியை ஏற்படுத்தியதே அவரது மிக முக்கிய சாதனையாகும்.

- வரலாற்றுப் புகழ்பெற்ற இந்திய விண்ணியல் வல்லுநரின் பெயரை ஆரியபட்டா என்று முதல் செயற்கைக் கோளுக்கு சூட்டி இந்திய அரசு அவருக்கு பெருமை சேர்த்திருக்கிறது.

- வராகமிகிரர் ஜோதிட கலைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தார். நட்சத்திரங்களும் கோள்களும் மனிதனது நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்துகின்றன என்று நம்பினார்.

- வராஹமிகிரர் எழுதிய மிகச்சிறந்த நூல் பஞ்ச சித்தாந்தம் என்பதாகும். இது ஐந்து சித்தாந்தங்களை சுருக்கமாக கொண்டிருக்கிறது. இதில் முதல் மூன்று சித்தாந்தங்கள் ஒன்றுக்கொன்று மேம்பட்டவை.

- மகாராஷ்டிராவில் கிபி 1114இல் பிறந்த பாஸ்கரா கணிதவியலில் சிறந்தவராக விளங்கினார்.

- கணிதம் பற்றிய தமது கருத்துக்களை சுத்தாந்த சிரோமணி என்ற நூலில் விவரித்துள்ளார். இது நான்கு பிரிவுகளைக் கொண்டது.

- கிமு 1700 ஆம் ஆண்டு சீனாவை ஆண்ட ஷாங் மரபினர் மற்றும் 1125 ஆண்டில் ஆண்ட சௌ மரபினர் ஆட்சி காலத்தில் சீன நாகரிகம் வளர்ச்சியுற்றது.

- சௌ மரபினர் காலத்தில்தான் சீனாவின் புகழ்பெற்ற தத்துவஞானி கன்பூசியஸ் லாவோட்சே போன்றோர் வாழ்ந்தனர்.



- சீன அரசவை பதிவேடுகளில் இருந்து பல்வேறு அறிவியல் செய்திகள் காணக்கிடைக்கின்றன.

- சான்றாக கிமு 1361இல் கிரகணம் நிகழ்ந்ததாக பதிவுசெய்யப்பட்டுள்ளது.

- சீனர்கள் கணிதத்திலும் சிறந்து விளங்கினர். எண்களை எழுதுவதில் கிமு மூன்றாம் நூற்றாண்டிலேயே சீனர்கள் சிறந்த நிலையை அடைந்திருந்தனர்.

- எண்களை எழுதும் முறையை எளிமையாக்கினர்.

- பண்டைய சீனாவில் ரசவாதம் சிறப்புற்று விளங்கியது. மனிதனின் வாழ்நாளை நீடிக்கச் செய்யும் காயகல்ப கண்டுபிடிப்பதில் சீனர்களுக்கு உள்ள ஆர்வம் ரசவாத கலை வளர்ச்சிக்கு வித்திட்டது.

- பண்டைய கால சீனர்கள் மட்பாண்டம் தயாரிப்பதற்கு சிறந்த தொழில்நுட்ப அறிவைப் பெற்றிருந்தனர். மேலும் அழகிய வேலைப்பாடுகள் உடைய பீங்கான் பாத்திரம் செய்வதையும் அவர்கள் சிறந்து விளங்கினர்.

- இந்தியாவில் முதல் நூற்றாண்டில் பட்டினால் செய்த காகிதம் பயன்படுத்தப்பட்டது. அடுத்த நூற்றாண்டில் முறையான காகிதம் செய்யும் தொழில் நுட்பத்தின் படி காகிதம் செய்ய தொடங்கினார்.

- இந்தியாவில் முதல் நூற்றாண்டில் பட்டினால் செய்த காகிதம் பயன்படுத்தப்பட்டது. அடுத்த நூற்றாண்டில் முறையான காகிதம் செய்யும் தொழில் நுட்பத்தின் படி காகிதம் செய்ய தொடங்கினார்.

- காந்த ஊசியை கொண்டு இவர்கள் திசை காட்டும் கருவி கண்டுபிடித்தனர். இது சீனர்கள் அறிவியல் தொழில்நுட்பத்துறையில் சிறந்து விளங்கினர் என்பதற்கு எடுத்துக்காட்டாகும்.

- பழங்கால சீன கட்டிடங்கள், கற்கள், மரம், செங்கல் மற்றும் களிமண் ஆகியவைகளால் கட்டப்பட்டன.

- கட்டிடத் தொழில் நுட்பத்திலும் சீனர்கள் சிறந்து விளங்கினர். சீனப்பெருஞ்சுவர் கட்டிடக்கலைக்கு சிறந்த உதாரணமாக திகழ்கிறது.

- பண்டைய சீனாவில் மெருகு மற்றும் சாய தொழில்கள் சிறந்து விளங்கின.

- ரூஸ்வெர்நிசிபெரா என்ற ஒருவகை மரத்தில் இருந்து சேகரிக்கப்பட்ட பசையைக் கொண்டு மெருகு தயாரித்து மண் பீங்கான் பாண்டங்கலுக்கு மெருகு ஏற்றினர்.

- சீன நாகரிகத்தில் கல் மற்றும் வெண்கலத்தால் ஆன பல சிலைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. டாங் வம்சத்தை சேர்ந்த தெய்வங்களை சித்தரிக்கும் பல சிற்பங்கள் உள்ளன.

## 3.9 முக்கிய வார்த்தைகள்

கால்நடை அறிவியல்: இது வீட்டு மற்றும் காட்டு விலங்குகளின் ஆரோக்கியத்தைப் பாதிக்கும் நோய்களைத் தடுப்பது, கட்டுப்படுத்துதல், கண்டறிதல் மற்றும் சிகிச்சை செய்தல் மற்றும் மக்களுக்கு விலங்கு நோய்கள் பரவுவதைத் தடுப்பது ஆகியவற்றைக் கையாள்கிறது.

ஹைட்ராலிக்ஸ்: இது நீர் மற்றும் பிற திரவங்களைப் பற்றிய அறிவியல் ஆய்வு ஆகும். இந்த ஆய்வு முக்கியமாக இயந்திர சக்திகளின் செல்வாக்கின் கீழ் திரவங்களின் நடத்தை மீது கவனம் செலுத்துகிறது.

புவியியல் வல்லுநர்: புவியியலைப் பயிற்சி செய்பவர். புவியியல் என்பதன் பொருள் கோடுகள் மற்றும் உருவங்கள் அல்லது புவியியல் அம்சங்கள் மூலம் கணிப்பு செய்வது ஆகும்.

நிலப்பிரபுத்துவம்: இது இடைக்காலத்தில் ஐரோப்பாவில் இருந்த ஒரு சமூக அமைப்பாகும், இதில் மக்கள் தங்களுக்குப் பாதுகாப்பையும் பதிலுக்கு நிலத்தைப் பயன்படுத்துவதையும் வழங்கிய பிரபுக்களுக்காக வேலை செய்து போராடினர்.

கிளெப்சிட்ரா: இது நீர் கடிகாரம் என்றும் அழைக்கப்படுகிறது. இது ஒரு பழங்கால கருவியாகும், இது படிப்படியாக நீரின் ஓட்டத்தால் நேரத்தை அளவிட பயன்படுகிறது.

## 3.10 சுய மதிப்பீடு கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுவிடை வினாக்கள்**

1. இந்தியாவில் குப்தர் காலத்தில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்க முன்னேற்றங்கள் குறித்து ஒரு சிறு குறிப்பை எழுதவும்.

2. பின்வருவனவற்றில் சிறு குறிப்புகளை எழுதவும்:

(அ) ஆர்யபட்டரின் பங்களிப்பு (ஆ) வராஹமிஹிரரின் பங்களிப்பு

(உ) பாஸ்கராவின் பங்களிப்பு.

3. வானியல் துறையில் சீன வானியலாளர்களின் முக்கிய சாதனைகள் என்ன?

**நெடுவிடை வினாக்கள்**

1. பண்டைய இந்தியாவில் குப்தர்கள் காலம் ஏன் பொற்காலம் என அழைக்கப்படுகிறது?

2. சீனர்களின் அறிவியல் சாதனைகளைப் பட்டியலிடுக.

## 3.11 மேலும் வாசிப்புகள்

1. ராஜாராம், கல்பனா. இந்தியாவில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம். இந்தியா: ஸ்பெக்ட்ரம் புக்ஸ் பிரைவேட் லிமிடெட் , 2012.

2. ஹால்டேன், ஜே. பி.எஸ். அறிவியல் மற்றும் இந்திய கலாச்சாரம். இந்தியா: நியூ ஏஜ் பப்ளிஷர்ஸ் பிரைவேட் லிமிடெட், 1965.

3. குப்புராம், ஜி. இந்தியாவில் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப வரலாறு. இந்தியா: தெற்காசியா புத்தகங்கள், 1990.

4. பேரா.வி.முருகன், வரலாற்றில் அறிவியல், பாரதி புத்தகாலயம், சென்னை, 2021

5. எஸ்.வர்கீஸ் ஜெயராஜ், அறிவியல் தொழில்நுட்ப வரலாறு, பாவை பதிப்பகம், 2010

# தொகுதி II

## நவீன அறிவியலின் பிறப்பு மற்றும் ஐரோப்பாவில் தொழில்நுட்பம் (15 மற்றும் 16 ஆம் நூற்றாண்டுகள்)

குறிப்பு

## அலகு - IV

## இடைக்கால ஐரோப்பாவில் அறிவியல் முன்னேற்றம் - ரோஜர் பேகன்- நவீன அறிவியலின் பிறப்பு - மறுமலர்ச்சி விஞ்ஞானிகள் - கோப்பர்நிக்கஸ் -கெப்ளர்



## 4.0 அறிமுகம்

கிபி 476இல் ரோமானியப் பேரரசின் வீழ்ச்சியிலிருந்து கிபி 1453 இல் கான்ஸ்டாண்டிநோபிள் நகரை துருக்கியர் கைப்பற்றும் வரையிலான காலத்தை இடைக்காலம் என்று அழைப்பர். இந்த இடைக்காலத்தில் பண்டைய கிரேக்க ரோமானிய பண்பாடுகள் புறக்கணிக்கப்பட்டன. கிறிஸ்தவ திருச்சபையின் ஆன்மீகக் கோட்பாடுகள் போற்றப்பட்டன.

ஆக்கரீதியிலான படைப்புகளை தூண்டும் சிந்தனை மற்றும் கற்பனை திறன்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டன. திருச்சபையின் போதனைகளை எந்த மறுப்பும் இன்றி அப்படியே ஏற்றுக்கொள்ளும் மனோபாவம் வளர்க்கப்பட்டது. திருச்சபை போதனைகளுக்கு புறம்பான அனைத்து அறிவியல் கருவிகளும் தடைசெய்யப்பட்டன. எனவே அறிவியல் வளர்ச்சியை பொருத்தவரை இடைக்காலமானது இருண்ட காலம் என அழைக்கப்பட்டது. இந்த இடைக்காலத்தில் அறிவொளி முற்றிலும் மறைந்துவிடவில்லை .பேரரசர் ஜஸ்டியனின் சட்டத்தொகுப்பு ஷார்லமனின் பள்ளிகளும் கிறிஸ்தவ ஆலயங்களின் பணிகளும் அந்த ஒளியை முற்றிலும் அழிந்து விடாமல் பார்த்துக் கொண்டன. இடைக்காலத்தின் பிந்திய பகுதியில் நிகழ்ந்த பல சமூக பொருளியல் மாற்றங்கள் அறிவியல் வளர்ச்சிக்கு வித்திட்டன. இடைக்காலத்தின் பிற்பகுதியில் அதாவது 12 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய அறிவியல் தொழில் நுட்பவியல் கலைகள் வளரத் தொடங்கின.

## 4.1 குறிக்கோள்கள்

இந்த அலகின் முடிவில் கீழ்க்கண்டவற்றைத் தெரிந்துகொள்ள முடியும்.

- இடைக்கால ஐரோப்பாவில் அறிவியல் திட்டத்தை விவரித்தல்
- நவீன அறிவியலின் பிறப்பை விளக்குதல்
- அறிவியல் மற்றும் தொழில்நுட்பத் துறையில் ரோஜர் பேகன் மற்றும் கெப்லரின் முக்கிய பங்களிப்பைப் பற்றி விவாதித்தல்

## 4.2 இடைக்கால ஐரோப்பாவில் அறிவியல் முன்னேற்றம்

இடைக்காலத்தின் பிற்பகுதியில் அறிவியல் வளர்ச்சி ஐரோப்பாவில் உச்சக்கட்டத்தை அடைந்தது. பைசாண்டிய பேரரசர்களான ஆறாம் லியோ, ஏழாம் கான்ஸ்டன்டைன் விண்ணியல் அறிவியலுக்கு முக்கிய பங்காற்றினர். புனித ரோமானியப் பேரரசர் இரண்டாம் பிரடரிக் இடைக்கால மன்னர்களுள் முற்போக்கு சிந்தனை மிக்கவராய் இருந்தார். அவரது அரசவையில் அறிஞர் பெருமக்கள் குழுமியிருந்தனர். அரேபிய எண் மானம் முறை ஐரோப்பாவில் பரவ காரணமாய் இருந்தவர் இவரே. சமய தத்துவங்களை கற்பிக்க சமய குருமார்களால் தோற்றுவிக்கப்பட்ட

கல்வி நிலையங்கள் பல்கலைக்கழகங்கள் வளர்ச்சியுற்றன. சான்றாக கிபி பத்தாம் நூற்றாண்டில் பிரான்சில் நிறுவப்பட்ட குளுனி என்ற மடாலயம் உயர் கல்வி நிலையமாக வளர்ச்சியுற்றது. இங்கு சமயத் தத்துவங்களோடு மருத்துவம், விண்ணியல் போன்ற பாடங்களும் கற்றுக் கொடுக்கப்பட்டன. வணிக வளர்ச்சி பொருளியல் முன்னேற்றத்திற்கும் பொருளியல் முன்னேற்றம் அறிவியல் வளர்ச்சிக்கும் வழிவகுத்தது. வணிகர்கள் பணிகளுக்கும் முக்கிய வணிக மையங்களும் செல்வதால் பிறநாட்டு அறிவியல் விதிகளை கண்டு கற்று தங்கள் நாட்டிற்கு அவற்றை பரப்பிட உறுதுணையாக இருந்தனர்.

முஸ்லிம்கள் ஆதிக்கத்தில் உள்ள கிறிஸ்தவ சமய புண்ணிய பூமியான பாலஸ்தீனத்தை மீட்க ஐரோப்பிய கிறிஸ்தவ அரசுகள் நடத்திய படையெடுப்புகள் சிலுவைப்போர்கள் எனப்படுகின்றன. படையெடுப்புகள் காரணமாக ஐரோப்பிய மன்னர்களும் வீரர்களும் ஆசிய நாடுகளை நேரடியாக காணும் வாய்ப்பினை பெற்றனர். அவர்களை எதிர்த்து போரிட்டு இஸ்லாமியர்கள் இந்தியா சீனா போன்ற பழம்பெரும் பண்பாட்டு சிறப்புமிகு நாடுகளோடு கொண்ட தொடர்பு காரணமாக அறிவியலில் வெகுவாக முன்னேறி இருந்தனர். இஸ்லாமியர்களிடம் இருந்து ஐரோப்பியர்கள் கீழைநாட்டு அறிவுக் கருவூலங்களை அறிந்துகொண்டனர். வேதியல், விண்ணியல், மருத்துவம் ஆகிய அறிவியல் கலைகள் அறிமுகமாயின. அறிவியல் முறைப்படி குறிக்கணக்கியல், எண்மானமுறைஆகியவற்றைக் கற்றுக் கொண்டனர். திசைகாட்டும் கருவி, காகிதம் செய்யும் முறை ஆகிய தொழில் நுட்பங்களையும் அறிந்து கொண்டனர். இறுதியாக வெடிமருந்தின் பயனையும் அறிந்து கொண்டனர்.

கிபி 9 மற்றும் 10 ஆம் நூற்றாண்டுகளில் அரேபியர் கிரேக்கம் மற்றும் கீழை நாட்டு அறிவியல் நூற்களை மொழிபெயர்த்தது போல் கிபி 12ஆம் பதிமூன்றாம் நூற்றாண்டில் ஐரோப்பியர் அரேபிய, அறிவியல் நூற்களை மொழிபெயர்க்கத் தொடங்கினர். ஸ்பெயினில் உள்ள டொலடோ என்ற இடம் இஸ்லாமிய கல்வி மையமாக விளங்கியது. இதன் வழியாக ஐரோப்பாவிற்கு அறிவியல் கருத்துக்கள் பரவியது. ஆர்ச் பிஷப் ரேமான்ட் என்பவர் முறையான மொழிபெயர்ப்பிற்கு ஏற்பாடு செய்தார். அதன் பயனாக பல அரேபிய அறிவியல் நூற்கள் லத்தீன் மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன. ஐரோப்பிய நாடுகளில் ஒன்றான

ஸ்பெயின் நாடு கிபி எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இஸ்லாமிய ஆதிக்கத்தின் கீழ் வந்தது. அவ்வாதிக்கம் கிபி 15ஆம் நூற்றாண்டு வரை நீடித்தது .அதன்விளைவாக ஸ்பெயின் அறிவியலிலும் பண்பாட்டிலும் சிறந்து விளங்கியது. அங்குள்ள புகழ்பெற்ற கார்டோவா பல்கலைக்கழகம் ஐரோப்பிய மாணவர்களை பெரிதும் ஈர்த்தது. ஸ்பெயின் வழியாக பிற ஐரோப்பிய நாடுகளுக்கு குறிப்பாக இத்தாலிக்கு அறிவியல் கலைகள் எளிதில் பரவின. காகிதம் தயாரித்தல், அச்சுக்கலை போன்ற அறிவியல் நுட்பங்களும் வெகுவாக பரவின.

## 4.3 ரோஜர் பேகன்

ரோஜர் பேகனின் மிகவும் குறிப்பிடத்தக்க தத்துவ சாதனைகள் கணிதம், இயற்கை அறிவியல் மற்றும் மொழி ஆய்வுகள் ஆகிய துறைகளில் இருந்தன. இக்கால அறிவியல் அறிஞர்களும் தலைசிறந்தவர் ரோஜர் பேகன்ஆவார். இவர் இடைக்காலம் தற்காலமாக மறுமலர்ச்சி அடைய காரணமாக இருந்தார். அவர் தற்கால அறிவியலின் தந்தை என போற்றப்படுகிறார். இங்கிலாந்தில் 1220 ஆம் ஆண்டு பிறந்த இவர் ஆக்ஸ்போர்டில் கல்வி பயின்றார். 1240 இல் பாரிஸ் பல்கலைக்கழகத்தில் தத்துவ ஆசிரியராக பொறுப்பேற்றார். அரிஸ்டாட்டிலின் கோட்பாடுகளை படித்தறிந்த இவர் பல்கலைக்கழகத்தில் ஒரு சிறந்த விரிவுரையாளராக அறியப்பட்டார். அதன் மூலம் அவருக்கு பல சிறந்த மாணவர்கள் கிடைத்தனர். 1252 இல் பிரான்சிஸ்கன் துறவற சபையில் சேர்ந்தார். சமய நம்பிக்கையும் திருச்சபை ஆதிக்கமும் மிகுந்த அக்காலத்தில் ஒரு துறவற அமைப்பிலிருந்து கொண்டு அறிவியல் ஆய்வில் ஈடுபடுவது ஒரு பாவமான செயலாக கருதப்பட்டது .அரிஸ்டாட்டில் சிந்தனைகளும் கருத்துக்களும் கடவுள் விரோத கொள்கைகளை கருதப்பட்டன. எனவே பாரிசில் அவர் பணியாற்றிய காலத்தில் ஒரு கைதி ஆகவே அவர் நடத்தப்பட்டார். ஆய்வுக்கான நூல்கள் கருவிகள் கூட அவருக்கு மறுக்கப்பட்டன. ஏனெனில் இடைக்காலம் காலம் மதவாதிகளின் காலமாகும். திருச்சபை மனிதனின் எண்ணங்கள் மீது ஆதிக்கம் கொண்டு அறிவியல் வளர்ச்சிக்கு தடையாக இருந்தது.

இடைக்காலத்தில் எழுந்த பல்வேறு இடையூறுகளுக்கு மத்தியில் அவர் ஓபஸ் மாஜஸ் என்ற நூலை எழுதினார். 1272 இல் இங்கிலாந்து திரும்பிய அவர் தம் நூலில் சமய விரோத கருத்துக்களை கூறியுள்ளார் என குறிப்பிடப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். விடுதலைக்குப் பின் அவர் இரண்டு ஆண்டுகள் உயிர் வாழ்ந்தார்.ரோஜர் பேகன் இறந்து 500 ஆண்டுகளுக்கு பின் ஐரோப்பிய சமூகத்தில் அவரது கருத்துக்கள் மிகப் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தின. 1753 இல் தான் அவரது ஓபஸ் மாஜஸ் முழுமையான நூலாக வெளியிடப்பட்டது. அவரது அறிவியல் கருத்துக்கள் பல கண்டுபிடிப்புகளுக்கு வழிவகுத்தன. அவர் பரிசோதனை செய்து பார்க்கும் உரிமையை மிகவும் வலியுறுத்தினார். மனித உணர்வு அறிவியலாளர்கள் என்றென்றும் பரிசோதனை செய்து பார்த்துக் கொண்டே இருப்பர், அனுபவ அறிவின் மூலம்எடுக்கும் முடிவின் முன் வலிமையான வாதங்கள் தோற்றுப் போகும் என்று கூறினார். சமயங்களின் வாக்குகளை உண்மை என நிருபிப்பது மறுப்பதோ ஆய்வு நடத்தி கண்காணித்த பின்னர் தான் சாத்தியமாகும் என்றும் கூறினார். பாரம்பரிய நான்குடன் (எண்கணிதம், வடிவியல், இசை மற்றும் வானியல்) புதிய அறிவியலைச் சேர்ப்பதன் மூலம் பேகன் மரபுவழிப் பிரிவை மாற்றியமைத்தார். அவர் ஏழு “சிறப்பு அறிவியல்“ பட்டியலை அடையாளம் கண்டார், அவற்றில் அவர் ஒளியியல், நீதித்துறை வானியல் (ஜோதிடம்), எடை அறிவியல், மருத்துவம், சோதனை அறிவியல், ரசவாதம் மற்றும் விவசாயம் ஆகியவற்றை உள்ளடக்கியது. நீதித்துறை வானியல், ரசவாதம் மற்றும் சோதனை அறிவியல் ஆகிய மூன்று அறிவியல்கள் முக்கியமானவை என்று பேகன் கூறினார்.

அறிவியலாளர்கள் செல்வம் பெறுவதுமில்லை செல்வம் தேடுவதும் இல்லை மன்னர்களை நாடினால் செல்வமும் பட்டங்களும் சேரும் ஆனால் அது அவருக்குப் பெருமகிழ்ச்சி அளிக்கும் ஆனால் ஆய்விற்கு இடையூறு அளிக்கும். அறிவை நாடும் ஒரு தத்துவஞானி தனது அறையில் சுவர்களை கூட தகர்த்தெரிந்து உலகின் வெளி எல்லையை அடையலாம் என்று கூறியுள்ளார். பின்தொலைநோக்கிக் கருவியின் இயல்பினை நன்கு அறிந்துள்ளார். சில விதிகளை நெருன்கியுள்ளேன்.அவற்றின் மூலம் ஒரு குழந்தை ஒரு பூதம் போல் தோன்றும் ஒரு மனிதன் மலையளவு காட்சியளிப்பார் என்று கூறியதிலிருந்து அவரது லட்சியம் தெரியவருகிறது. ஒளிவிலகல் தன்மை

பற்றிய பொதுவான கருத்துக்கள் கூறியுள்ளார் .தாமிர தகட்டில் பலூன் செய்து அதில் செலுத்தினால் வானில் கனமில்லாத பொருட்கள் மிதப்பது போல் இதுவும் மிதக்கும் என்றார். இறக்கைகளை அடித்துக் கொண்டு வானத்தில் பறக்கும் இயந்திரங்களை பற்றிய திட்டங்களை தீட்டினார். வெடிமருந்தை செய்யக்கூடிய சரியான வழியை தெரிவித்த முதல் மேலை நாட்டவர் ஆனார். இந்த வெடிமருந்து அதிக சக்தி வாய்ந்ததாக இருக்கும் என்றும் போரில் பயன்படுத்தலாம் என்றும் கூறினார் .மூக்கு கண்ணாடி, தானே செல்லும் கப்பல்கள் ,சூரிய கிரகணத்தை பார்க்கும் கேமரா ஆகியவை பற்றியும் தெரிவித்தார். சில நீரியல் மற்றும் பொறியியல் கருவிகளை உருவாக்கினார்.

அட்லாண்டிக் பெருங்கடலில் மேற்கு நோக்கி படகில் சென்றால் இந்தியாவை அடையலாம் என்று கூட கற்பனை செய்தார். அவரது கற்பனை திட்டமான தானே செல்லும் படகினை பின்னாளில் உருவாக்கினார் பறக்கும் எந்திரங்கள் பற்றிய கனவை ரைட் சகோதரர்கள் நினைக்கிறார் அட்லாண்டிக் கடலைக் கடந்து இந்தியாவை அடையலாம் என்ற கற்பனை திட்டம் அமெரிக்க கண்டம் கண்டு பிடிப்பதில் நிறைவேறியது.

திருச்சபையின் கோபத்திற்கு உள்ளான ரோஜர் பேகன் மதக் கோட்பாடுகளுக்கு விரோதமான வரிகளை பேசினார் எழுதினார் என்று குற்றம் சாட்டப்பட்டு பிரான்சிஸ்கன் பிரிவு துறவிகளாலேயே விசாரிக்கப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். மற்றவர் சிந்தித்துப் பார்க்காத விஷயங்களை ரோஜர் பேகன் ஆராய்ந்ததற்காகவும் விஞ்ஞான சோதனைகள் செய்ததாகவும் இவருக்கு 14 ஆண்டு சிறைவாசம் அளிக்கப்பட்டது. வயது முதிர்ந்த நிலையில் 1792 இல் விடுதலை செய்யப்பட்ட இவர் இரண்டு ஆண்டுகளில் உயிரிழந்தார்.

## 4.4 நவீன அறிவியலின் பிறப்பு

15 மற்றும் 17 ஆம் நூற்றாண்டுகளில், வானியல், மருத்துவம், இயற்பியல், உயிரியல் மற்றும் வேதியியல் ஆகிய துறைகளில் புதிய சிந்தனைகளும் அறிவும் தோன்றின. இந்த சகாப்தத்தில் பிறந்த கருத்துக்கள் இயற்கையின் பண்டைய மற்றும் இடைக்கால பார்வையை மாற்றி நவீன அறிவியலின் அடித்தளத்தை தயார் செய்தன.

அதனால்தான் இந்த சகாப்தம் அறிவியல் புரட்சி என்று அழைக்கப்படுகிறது. இந்த சகாப்தத்தை விவரிக்க 1939 ஆம் ஆண்டில் தத்துவவாதியும் வரலாற்றாசிரியருமான அலெக்ஸாண்ட்ரே கொய்ரே என்பவரால் அறிவியல் புரட்சி என்ற சொல் உருவாக்கப்பட்டது. இருப்பினும், சில அறிஞர்கள், 16 மற்றும் 17 ஆம் நூற்றாண்டுகளில் அறிவியல் முன்னேற்றங்களைக் குறிக்க அறிவியல் புரட்சி என்ற சொல்லைப் பயன்படுத்துவதை எதிர்த்துள்ளனர். எடுத்துக்காட்டாக, அறிவியலின் நவீன மற்றும் ஆரம்பகால நவீன வரலாற்றின் அறிஞர் ஜேம்ஸ் ஹன்னம் கூறினார்: ”விஞ்ஞானப் புரட்சி“ என்பது எதையும் விளக்காத பாரபட்சமான வரலாற்று அடையாளங்களுள் ஒன்றாகும். நீங்கள் பன்னிரண்டாவது முதல் இருபதாம் வரையிலான எந்த நூற்றாண்டையும் அறிவியலில் புரட்சி என்று அழைக்கலாம்”. மேலும் இந்த வார்த்தையானது “கோப்பர்நிக்கஸுக்கு முன்பு அறிவியலுக்கு முக்கியத்துவம் வாய்ந்த எதுவும் நடக்கவில்லை என்ற பிழையை வலுப்படுத்துவதைத் தவிர வேறொன்றுமில்லை“ என்றும் அவர் கூறினார்.

இடைக்கால முடிந்து நவீன காலம் உருவெடுப்பதற்கு பல ஆண்டுகளை கடந்து வரவேண்டியிருந்தது. 16 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஐரோப்பாவில் சமூக அறிவியல் தொழில்நுட்பத்தில் ஒரு புதிய கண்ணோட்டம் அமைந்திருந்தது .இடைக்காலத்தில் திருச்சபையின் ஆதிக்கத்தால் அறிவு வளர்ச்சி தடைபட்டது .அப்போது கடவுள் கொள்கை மட்டுமே மக்களின் மனதை ஆக்கிரமித்திருந்தது. கலை, இலக்கியங்களைப் பற்றி அதிகம் சிந்திக்காமல் கடவுளைப் பற்றி மட்டுமே சிந்தித்து வந்தனர். இதனால் இடைக்காலத்தில் அறிவு வளர்ச்சியை தடைபட்டது. இடைக்காலம் முடிவடைந்து நவீன காலம் தொடங்குவதற்கு காரணமாக இருந்த இயக்கம் மறுமலர்ச்சி இயக்கம் ஆகும். பதினாறாம் நூற்றாண்டில் ஐரோப்பிய மக்களின் அணுகுமுறையில் ஏற்பட்ட மாற்றங்களைக் குறிப்பதுதான் இந்த மறுமலர்ச்சி இயக்கம் ஆகும். மக்களிடையே பண்டைய கிரேக்க ரோமானிய கலை இலக்கியங்களை பயில்வதில் புதிய ஆர்வம் ஏற்பட்டது .அதனால் மக்களின் சொல் மற்றும் செயல் சிந்தனைகளில் புதியதொரு மாற்றம் ஏற்பட்டது. இந்த மாற்றம் கலை இலக்கியம் அறிவியல் ஆகிய அனைத்து துறைகளிலும் எதிரொலித்தது. இம்மாற்றங்களைத் தான் மறுமலர்ச்சி என்று அழைக்கிறோம். இந்த பழக்கத்தை ஐரோப்பாவின்

மறுபிறப்பு என்று வரலாற்று அறிஞர்கள் கருதுகிறார்கள். பண்டைய கிரேக்க ரோமானிய பண்பாட்டின் உயர்வையும் பெருமையையும் மீண்டும் மக்கள் உணர ஆரம்பித்தனர்.

இடைக்காலத்தில் சமயத்தின் மீது இருந்த தீவிர பற்றால் எதையும் கண்மூடித்தனமாக ஏற்றுக் கொண்ட பழக்கவழக்கம் மாறி எதையும் ஆய்ந்து அறிகின்ற போக்கு உருவாகியது. மக்களின் எண்ணங்களிலும் செயல்களிலும் சுதந்திர உணர்வு மேலோங்கியது. எதையும் திறனாய்வு கண்ணோட்டத்தோடு ஆராய்ந்து பகுத்தறிவுக்கு பொருந்தாத கருத்துக்களை மறுக்கும் துணிவை மக்கள் பெற்றனர். இந்த திறனாய்வு நோக்கு உண்மையை உணர வேண்டும் என்ற ஆர்வம் இலக்கியத் துறையில் மட்டுமன்றி அறிவியல் துறையிலும் பல மாறுதல்களை ஏற்படுத்தின ஆராய்ச்சி பரிசோதனை ஆகியவற்றின் விளைவாக அறிவு வளர்ச்சி அடைந்தது அதன் விளைவாக பல புரட்சிகரமான அறிவியல் கண்டுபிடிப்புகள் தோன்றின. மறுவுலக வாழ்விற்கு ஆகவே இவ்வுலக வாழ்வு என்ற சிந்தனையும் எண்ணப் போக்கும் மக்கள் மத்தியில் இருந்து மாறியது. மனிதனின் ஆற்றல் ,அழகு அன்றாட வாழ்க்கை, வீர தீர சாகசச் செயல்கள் ஆகியவற்றை பிரதிபலிக்கும் இலக்கிய கலைப் படைப்புகள் போற்றப்பட்டன. மூன்றாவதாக விண்ணியல், மருத்துவம், தொழில்நுட்பவியல் ஆகிய அறிவியல் கலைகளிலும் ஆர்வம் ஏற்பட்டது. அன்றாட வாழ்க்கையில் பயன்படும் புதிய கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவை அறிவியல் ஆய்வுகளை ஊக்குவித்தன.

**மறுமலர்ச்சி தோன்ற காரணங்கள்**

இடைக்கால இறுதியில் ஐரோப்பாவில் புதிய நகரங்கள் தோன்றின. பொருளாதாரம் வளர்ச்சி அடைந்ததால் நடுத்தர வர்க்கத்தினர் என்ற புதிய பிரிவினர் சமூகத்தில் தோன்றினர். அவர்கள் வாணிபம் காரணமாக வெளிநாட்டவருடன் கொண்ட தொடர்பால் புதிய கருத்துக்களை அறிந்தனர். கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு ,பாரிஸ் போன்ற இடங்களில் புதிய பல்கலைக்கழகங்கள் துவக்கப்பட்டு அங்கு சமயத்தோடு மருத்துவம் விண்ணியல் போன்ற அறிவியல் கலைகளும் கற்றுக் கொடுக்கப்பட்டன.

1453 இல் கான்ஸ்டாண்டிநோபிள் நகரை சீக்கியர்கள் தாக்கி கைப்பற்றியது அங்குள்ள கிரேக்க அறிஞர்கள் தங்கள் சமயத்திற்கும்

குறிப்பு

பண்பாட்டிற்கும் பகைவர்களான துருக்கியின் ஆதிக்கத்தை வெறுத்து ஐரோப்பிய நகரங்களில் புகலிடம் தேடி வந்தனர். அவர்கள் கொண்டு வந்த கலை இலக்கியங்களை ஆர்வமுடன் ஐரோப்பியர்கள் வரவேற்றனர். இது மறுமலர்ச்சிக்கு வித்திட்டது.

சிலுவைப் போர்கள் காரணமாக ஐரோப்பியர் அரேபிய பண்பாட்டு சிறப்புகளை அறிந்து கொள்ள முடிந்தது. அரபு எண் முறைகள், வெடிமருந்து ,திசை காட்டும் கருவி ஆகியவற்றை அவர்களிடம் இருந்து ஐரோப்பியர்கள் கற்றுக் கொண்டனர். இப் புதிய தொழில்நுட்பங்கள் மேலும் பல அறிவியல் கருவிகளை கண்டுபிடிக்க அவர்களுக்கு ஆர்வத்தை ஏற்படுத்தின.

ஜெர்மனியைச் சேர்ந்த ஜான் கூட்டன்பர்க் என்பவர் கிபி 1250 மெயின்ஸ் நகரில் அச்சு இயந்திரத்தை நிறுவினார். அந்த அச்சுஇயந்திரம் புதிய கல்வி விரைவாகவும் மலிவாகவும் மக்கள் மத்தியில் பரவ பெரிதும் உதவி புரிந்தது. அதன் மூலம் பல நூல்கள் அச்சிடப்பட்டன. மக்கள் கல்வியறிவு பெற அச்சியந்திரம் பெரிதும் உதவியாக இருந்தது.

நிலவியல் கண்டுபிடிப்புகள் மறுமலர்ச்சி தோன்றுவதற்கு முக்கிய காரணமாக இருந்தன. பதினைந்தாம் நூற்றாண்டில் ஐரோப்பியர்கள் துணிகரமான கடற் பயணங்களை மேற்கொண்டனர். அதனால் பல புதிய நாடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. மேலும் புவியியல் சார்ந்த புதிய உண்மைகளும் கண்டுபிடிக்கப்பட்டன. கி.பி.1492 கிறிஸ்தோபர் கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்தார். கி.பி.1498இல் வாஸ்கோடகாமா இந்தியாவிற்கு கடல் மார்க்கமாக புதிய வழியைக் கண்டுபிடித்தார். இதன் காரணமாக ஐரோப்பியர்கள் உலகின் பல்வேறு பகுதிகளில் வாழும் மக்களுடன் தொடர்பு கொண்டு அவர்களின் கருத்துகளால் ஈர்க்கப்பட்டனர்.

மறுமலர்ச்சி முதலில் இத்தாலியில் இருந்து தொடங்கியது. அதற்கு காரணம் இத்தாலி மத்திய தரைக்கடலின் நடுப்பகுதியில் அமைந்திருந்தது ஆகும். இத்தாலியில் வெனிஸ், மிலான் போன்ற நகரங்களில் வாணிபத்தின் காரணமாக செல்வ செழிப்புடன் விளங்கியதாலும் பிளாரன்ஸ் நகரத்து ஆட்சியாளரான லொரென்சோ மெடிசி என்பவர் பண்டைய கலை இலக்கியங்களை பாதுகாத்தும் கலைஞர்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து மறுமலர்ச்சி

இயக்கத்தின் வளர்ச்சிக்கு பெரிதும் உதவி புரிந்தார். பிளேட்டோவின் தத்துவ ஆராய்ச்சி ஊக்குவிக்க அங்கு ஒரு ஆய்வுகூடத்தை நிறுவியது குறிப்பிடத்தக்கதாகும். இறுதியாக தாந்தே,பெட்ரார்க், பொகாசியோ ஆகிய கவிஞர்கள் படைத்த இலக்கியங்கள் புதிய சிந்தனைகளை தோற்றுவித்து மறுமலர்ச்சிக்கு வழிவகுத்தன.

மறுமலர்ச்சி என்பது இடைக்காலத்திற்கும் நவீன காலத்திற்கும் இடையிலான முக்கிய இணைப்பாக நிரூபிக்கப்பட்டது. ஒரு அறிவார்ந்த மற்றும் கலாச்சார மறுமலர்ச்சியாக, இது ஐரோப்பாவின் வரலாற்றை மாற்றியது. மதம் முதல் அரசியல், அறிவியல், இலக்கியம் என அன்றாட வாழ்வின் அனைத்துத் துறைகளும் மாற்றத்தைக் கண்டன. விஞ்ஞானம் முன்னேறி, ஒவ்வொரு நாளும் புதிய முன்னேற்றம் அடைந்ததால், மக்கள் இதுவரை தங்கள் வாழ்க்கையை கட்டுப்படுத்திய பிடிவாத நம்பிக்கைகளை புறக்கணித்தனர்.

## 4.5 கோப்பர்நிக்கஸ்

நவீன வானியலின் தந்தை என அழைக்கப்படும் நிக்கோலஸ் கோப்பர்நிக்கஸ் ஒரு போலந்து துறவி மற்றும் வானியலாளர் ஆவார். அவர் சூரிய குடும்பத்தின் சூரிய மையக் கோட்பாட்டை உருவாக்கினார். இது ஹெலனிஸ்டிக் வானியலாளரான தாலமியால் உருவாக்கப்பட்ட காஸ்மோஸின் புவி மையக் கோட்பாட்டை மாற்றியது. அவர் இறப்பதற்கு சற்று முன்பு, கோப்பர்நிக்கஸ் 1543 இல் வான கோளங்களின் புரட்சிகள் குறித்து வெளியிட்டார். இது உண்மையில் சமகால வானியல் மற்றும் அறிவியல் புரட்சியின் தொடக்க புள்ளியாக கருதப்படுகிறது. அறிவியல் புரட்சி, இவ்வாறு, உலகின் இடைக்கால பார்வையை மறைத்தது மற்றும் இயற்பியல், இயற்கை, உயிரியல் மற்றும் மனிதர்கள் மீதான நமது நவீன கட்டளையுடன் அதை மாற்றியது.

இடைக்கால விண்ணியல் கோட்பாடுகளில் புரட்சிகரமான மாறுதல்களை கொண்டுவந்தவர் நிக்கோலஸ் கோபர்நிகஸ் ஆவார். 1473 ஆம் ஆண்டு போலந்து நாட்டில் பிறந்த இவர் சிறு வயதிலேயே சந்திரன் விண்மீன்கள் ஆகியவற்றின் அசைவுகளை காண்பதில் மிகவும் ஆர்வமுடன் இருந்தார். கிராகோ பல்கலைக்கழகத்தில் சேர்ந்து கணிதமும் விஞ்ஞானமும் பயின்ற இவர் அங்கு பணிபுரிந்த பேராசிரியர்

ஆல்பர்ட் என்பவர் இடத்தில் விண்ணியலைப்பற்றி பல அறிய செய்திகளை கற்றுக்கொண்டார். இதன் காரணமாக அவருக்கு வானியலில் ஆர்வம் தோன்றியது .மேலும் இவர் விண்ணியல் சம்பந்தமான டாலமியின் கோட்பாடுகளை ஆய்வுக்கு உட்படுத்தினார். இதுவே விண்ணியல் தொடர்பாக கோபர்நிகஸின் ஆய்வு சரியான திசையில் சென்றதற்கு காரணம் ஆகும். மேலும் இவரது ஆசிரியர் இனிகோ என்பவரின் போதனையும் இவருக்கு ஆர்வத்தை தூண்டின. எனவே டாலமியின் கோட்பாடுகளில் குறைபாடு உள்ளது என்று கூறி அதனை நிராகரித்தார்.

கோபர்நிகஸ் இத்தாலியில் இருந்தபோது கிமு மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த அரிஸ்டாடில் என்ற கிரேக்க அறிஞர் வலியுறுத்திய பூமியும் மற்ற கோள்களும் சூரியனை சுற்றி வருகின்றன என்ற கருத்து இவரது கவனத்தை ஈர்த்தது. ஆனால் கிபி இரண்டாம் நூற்றாண்டில் டாலமியால் கண்டுபிடிக்கப்பட்ட பூமி மையக் கொள்கை அப்போது பிரபலமாக இருந்தது. பூமியை சுற்றியே சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவை வலம் வருகின்றன என்ற வானியல் கொள்கை உண்மையான கருத்துக்களை கொண்டிருக்கவில்லை என கோப்பர்நிக்கஸ் நம்பினார். எனவே சூரியனை மையமாக வைத்து பிற கோள்கள் சுற்றுகின்றன என்ற கருத்தை ஆராய முற்பட்டார். இரவு நேரங்களில் வானத்தையும் வானில் உள்ள கோள்களையும் ஆராய்வதில் நேரம் செலவிட்ட கோபர்நிகஸ் பல ஆண்டுகாலம் தீவிர ஆராய்ச்சிகளுக்கும் பரிசோதனைகளுக்கும் பிறகு புதிய வானவியல் கோட்பாடுகளை கண்டறிந்தார். கி.பி.1543 இல் தமது வாழ்நாளின் இறுதி ஆண்டில் விண்ணக கோளங்களின் சுழற்சி பற்றி என்ற நூலின் மூலம் தனது விண்ணியல் பற்றிய கருத்துக்களை வெளியிட்டார். அந்த நூலை அன்றைய போப்மூன்றாம் பால் என்பவருக்கு சமர்ப்பணம் செய்திருந்தார். மேலும் கணித வல்லுநர்களுக்கு மட்டும் என்றும் குறிப்பிட்டிருந்தார்.

ஒன்றுக்கொன்று தொடர்பற்ற விளக்கங்கள் கொண்ட நூல் அன்றைய தலைமுறையினருக்கு தலைமுறையினர் இடையே எந்தவித பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. கோபர்நிகஸ் இறந்து 20 ஆண்டுகளுக்குப் பின் தோன்றிய விண்ணியல் அறிவியல் அறிஞர் கலிலியோ கூட அந்நூலை முற்றிலுமாக படிக்கவில்லை.

டாலமியின்கொள்கைகளுக்கு எதிரான விண்ணியல் கோட்பாட்டை மாற்ற முயற்சிக்கிறார் என்று அறிந்து பலர் அவரது கருத்துக்களைஏளனம் செய்தனர். ஆனால் அவரது நூல் பல அறிவியல் உண்மைகளை வெளிப்படுத்தியது.

சூரியன் பிரபஞ்சத்தின் மையத்தில் இருக்கிறது, பூமியும் மற்ற கோள்களும் சூரியனை சுற்றி வட்டமாக பாதையில் செல்கின்றன. பூமி தனது அச்சில் சுழல்கிறது, பூமியின் சுழற்சியால் இரவு பகல் ஏற்படுகின்றன, பூமி சூரியனைச் சுற்றுவதால் பருவங்கள் உண்டாகின்றன. மேலும் நட்சத்திரங்கள் வெகு தூரத்தில் உள்ளதால் அவை சூரியனை சுற்றி வரவில்லை என்றும் சூரிய குடும்பத்தில் உள்ள ஒரு சிறிய கோள் நாம் வசிக்கும் பூமி என்றும் கோபர்நிகஸ் கூறுகிறார். நாம் காணும் சூரியனைப் போல பல சூரியன்கள்களே நட்சத்திரங்கள் ஆகும். சூரிய சந்திர கிரகணங்கள் விண் கோள்களின் இடப்பெயர்ச்சியால் ஏற்படுகின்றன என்றும் கோள்களின் இச்செயல்கள் அனைத்தும் படைப்பின் விதிகளுக்கு இணங்க மாறாது நிரந்தரமாக நிகழ்கின்றன என்றும் கோபர்நிகஸ் தனது நூலில் பல வானியல் உண்மைகளை விவரித்துக் கூறுகிறார். இதன்காரணமாக விண்ணியல் பற்றிய அரிஸ்டாட்டிலின் இரண்டாயிரமாண்டு கோட்பாடு தகர்த்து எறியப்பட்டது. எனினும் இவர் தனக்கு முன்னால் கூறியாவர்களைப்போல இவரும் சூரியமண்டலத்தின் படி அளவை மிகவும் குறைவாக மதிப்பிட்டு இருந்தார். சுற்றுப் பாதைகள் வட்ட கோளின் வட்டங்களாக இருப்பதாக இவர் தவறாக நம்பினார். எனவே அவரது கோட்பாடுகள் கணித முறைப்படி சிக்கலாக இருந்ததுடன் துல்லியமாக இல்லாமலும் இருந்தது. ஆனால் கோப்பர்நிக்கஸின் இந்த விண்ணியல் பற்றிய ஆய்வு நூல் அன்று மிகவும் பரபரப்பை ஏற்படுத்தியது. மேலும் பல விண்ணியல் அறிஞர்களை மேலும் பல ஆராய்ச்சிகளை மேற்கொள்வதற்கு இந்த நூல் ஒரு உந்து சக்தியாக இருந்தது.

## 4.6 கெப்ளர்

ஜோகன்னஸ் கெப்ளர் உலகம் போற்றும் வானியல் ஆராய்ச்சியாளர் ஆவார். கணித விஞ்ஞானியாக இருந்த இவர் கோள்களின் சுழற்சி குறித்த திட்டவட்டமான கோட்பாடுகளை

உருவாக்கினார். இவர் கிபி 1571 ஜெர்மனியில் ஒரு எளிய குடும்பத்தில் பிறந்தார். துபிங்கன் பல்கலைகழகத்தில் இறையியல் பயின்ற இவர் விண்ணியல் கலையில் மூன்றாவதாக கிரகங்களின் இயக்கம் பற்றிய தமது பெயரால் அழைக்கப்படும் மூன்று விதிகளை குறிப்பிட்டார். கெப்ளர் வெளியிட்ட மூன்று பிரபல விதிகள் சூரியனை சுற்றும் கோளங்களின் இயக்கங்களை துல்லியமாக விவரித்தன. இதனால் கோபர்நிகஸ், கலிலியோ போன்ற மேதைகளுக்கு கூட தீர்வு காண முடியாமல் இருந்த வானியல் சிக்கலுக்கு இவரால் தீர்வு காண முடிந்தது.

இவரது இளமை வாழ்க்கை மிகவும் துயரம் மிக்கதாக இருந்தது .கல்வியறிவற்ற இருந்த இவரதுபெற்றோர்கள் மிகுந்த சிரமங்களுக்கிடையே இவரை வளர்த்தனர். சிறுவயதிலேயே அரைக் குருடாகிய வேலைக்குச் செல்ல தகுதியற்றவராக இருந்ததால் சிக்கலின்றி பள்ளிக்குச் சென்றார். ஆர்வத்துடன் கணிதத்தை கற்றவர் பின் ஒரு பேராசிரியராகவும் பணிபுரிந்தார். பேராசிரியராகப் பணிபுரியும் போது தான் கிரகங்களின் இயக்கங்களைப் பற்றிய ஆராய்ச்சியை தொடங்கினார். அப்போது வெளியிட்ட ஒரு ஆராய்ச்சி நூலை படித்த புகழ்பெற்ற வானியல் அறிஞர் டைகோ பிராக்கே பிரேக் நகரில் இருந்த தனது ஆராய்ச்சி கூடத்தில் தனக்கு உதவியாளராக வரும்படி அழைத்தார். இவரது திறமையைக் கண்டு பாராட்டிய புனித ரோமானியப் பேரரசர் இரண்டாம் ருடால்ப் டைகோவிற்கு அடுத்தபடியாக இவரை அடுத்தபடியாக அரசவை கணித மேதையாக நியமித்தார்.

## கெப்ளரின் விதிகள்

கெப்ளரின் ஆராய்ச்சிக் குறிப்புகள் அவரது ஒரு புதிய வானியல் என்ற நூலில் விளக்கப்பட்டுள்ளது. இந்த நூலில் வான் கோள்களின் இயக்கம் பற்றிய முதல் இரண்டு விதிகளை விளக்கியிருந்தார். பத்து ஆண்டுகளுக்குப் பிறகு தனது மூன்றாவது விதியை வெளியிட்டார். கெப்ளரின் .சிறப்பு வாய்ந்த அந்த மூன்று விதிகள் பின்வருமாறு

1. கோள்கள் சூரியனை நீள்வட்டப் பாதையில் சுற்றுகின்றன.சூரியன் ஒரு குவியத்தில் அமைந்துள்ளது.

2. கோள்கள் சூரியனுக்கு அருகில் வரும்போது அவை வெகு விரைவாக சுற்றுகின்றன. கோளத்தையும் சூரியனையும் இணைக்கும் கோடு சமகால அளவுகளில் சம அளவு பரப்புகளை அளாவிச் செல்லும் வகையில் ஒரு கோளத்தின் வேகம் வேறுபடுகிறது.

3. கோளங்கள் சூரியனை சுற்றி செல்லும் காலங்களில் இருமடங்கு அவற்றின் சுற்றுப் பாதைகளின் ஆரங்களின் மூன்றும் மடங்கிற்கு நேர் விகிதத்தில் உள்ளது. அதாவது ஒரு கோளம் சூரியனிலிருந்து எவ்வளவு அதிக தூரத்தில் இருக்கிறதோ அவ்வளவு அதிக காலம் அது அதன் ஒரு சுழற்சியை முடிப்பதற்கு பிடிக்கிறது.

இந்த மூன்று விதிகளும் பிற்காலத்தில் ஐசக்நியூட்டனின் ஆய்வுகளுக்கு பேருதவியாக இருந்தன. அதன் மூலம் சந்திரன் சுற்றும் பாதையை அறிந்து கொள்ள முடிந்தது. தற்காலத்தில் செயற்கைக் கோள்களை விண்வெளியில் ஏவுவதற்கும் அவை பயன்பட்டன. மேற்கண்ட கெப்ளரின் மூன்று விதிகள் சூரியனை சுற்றும் கோளங்களின் இயக்கங்களை முழுமையாகவும் துல்லியமாகவும் விவரிக்கின்றன. இவை சிந்தனை வரலாற்றில் ஒரு திருப்பு முனையாகும். இவைகளை முதல் இயற்கை விதிகள் என்று கூறலாம். ஆரம்பத்தில் மற்ற விஞ்ஞானிகளால் புறக்கணிக்கப்பட்ட போதிலும் ஆண்டுகள் செல்லச்செல்ல கெப்ளரின் விதிகள் முக்கியத்துவம் பெற்று அறிவியல் உலகிற்கு மிகவும் பயனுள்ளதாக இருந்தது. கோள்களின் இயக்க விதிகளை வகுத்ததுடன் வானியலில் வேறுபல சிறிய கண்டுபிடிப்புகளையும் செய்தார்.

கெப்ளர் வானியலில் இயற்கை சக்திகள் என்ற கருத்து கொள்கையை புகுத்தினார். உலகம் சூரியனை மையமாக வைத்து சுழல்வதற்கு காரணம் இயற்கையும் புலன் கடந்த நுண்பொருள் தன்மையும் ஆகும் என்று விளக்கினார். அதாவது நிலையான சூரியன் நட்சத்திரங்கள் ஆகியவற்றிற்கு இடையே உள்ள இடைவெளியை தந்தையாகிய இறைவனுக்கு மகனுக்கும் புனித ஆவிக்கும் உவமையாகக் கூறினார். இந்த உவமைகளைநீண்ட நாட்கள் நம்பினார். பின்னர் நட்சத்திரங்கள் அசைகின்றன என்று தெரிந்தவுடன் அவை கோள்கள் என்றார். சூரியன் இந்த கோள்களின் மையத்தில் உள்ளது. சூரியன் மையத்தில் இருந்தாலும் மற்றவைகளை இயக்குகிறது கடவுள் படைத்த செயலை புனித ஆவி மூலமாக செய்வது போல சூரியன் தன்னுடைய சக்தியை அசைகின்ற பொருள் மீது செலுத்துகிறது.

தற்கால வானவியலுக்கும், பௌதிகத்தில் இயக்கவியலின் விதிகளுக்கும் அடிகோலினார். ஐஸக் நியூட்டனின் அறிவியல் பணிகளுக்கு முதற்காரணமாக இருந்தவை கெப்ளரின் ஆராய்ச்சிகளே ஆகும்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. மறுமலர்ச்சியின் இரண்டு குறிப்பிடத்தக்க அம்சங்களைக் கூறவும்.
2. ரோஜர் பேகனால் முக்கியமானதாகக் கருதப்பட்ட மூன்று அறிவியல்களின் பெயரைக் குறிப்பிடவும்.
3. நவீன வானியலின் தந்தை என்று அழைக்கப்படுபவர் யார்?
4. கெப்லரால் கண்டுபிடிக்கப்பட்ட கோள்களின் இயக்கத்தின் இரண்டாவது விதி என்ன?
5. கெப்ளரியன் தொலைநோக்கியின் குறிப்பிடத்தக்க அம்சம் என்ன?

## 4.7 உங்கள் முன்னேற்றக் கேள்விகளைச் சரிபார்க்க பதில்கள்

1. மறுமலர்ச்சியின் இரண்டு குறிப்பிடத்தக்க அம்சங்கள் பின்வருமாறு:

(i) மறுமலர்ச்சியின் போது காரணம் மற்றும் கவனிப்பு மீது அழுத்தம் இருந்தது.

(ii) மறுமலர்ச்சி என்பது இடைக்காலத்திற்கும் நவீன காலத்திற்கும் இடையிலான முக்கிய இணைப்பாக நிரூபிக்கப்பட்டது. ஒரு அறிவார்ந்த மற்றும் கலாச்சார மறுமலர்ச்சியாக, இது ஐரோப்பாவின் வரலாற்றை மாற்றியது. மதம் முதல் அரசியல், அறிவியல், இலக்கியம் என அன்றாட வாழ்வின் அனைத்துத் துறைகளும் மாற்றத்தைக் கண்டன.

2. நீதித்துறை வானியல், ரசவாதம் மற்றும் சோதனை அறிவியல் ஆகிய மூன்று அறிவியல்கள் முக்கியமானவை என்று பேகன் கூறினார்.

3. நிக்கோலஸ் கோப்பர்நிக்கஸ் நவீன வானவியலின் தந்தை என்று அழைக்கப்படுகிறார்.

4. கெப்லரின் கோள்களின் இயக்கத்தின் இரண்டாவது விதி, கோள்கள் சமமான பகுதிகளில் சமமான பகுதிகளை துடைத்து விடுகின்றன.

5. கெப்லிரியன் தொலைநோக்கியின் குறிப்பிடத்தக்க அம்சம் என்னவென்றால், கலிலியோவின் குவிந்த மற்றும் குழிவான

லென்ஸ்களின் கலவையை விட இரண்டு குவிந்த லென்ஸ்கள் அதிக உருப்பெருக்கத்தை உருவாக்க முடியும்.

**குறிப்பு**

## 4.8 சுருக்கம்

- இடைக்காலத்தில் பண்டைய கிரேக்க ரோமானிய பண்பாடுகள் புறக்கணிக்கப்பட்டன. கிறிஸ்தவ திருச்சபையின் ஆன்மீகக் கோட்பாடுகள் போற்றப்பட்டன.
- ஆக்கரீதியிலான படைப்புகளை தூண்டும் சிந்தனை மற்றும் கற்பனை திறன்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டன.
- பேரரசர் ஜஸ்டியனின் சட்டத்தொகுப்பு ஷார்லமனின் பள்ளிகளும் கிறிஸ்தவ ஆலயங்களின் பணிகளும் அந்த ஒளியை முற்றிலும் அழிந்து விடாமல் பார்த்துக் கொண்டன.
- 12 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய அறிவியல் தொழில் நுட்பவியல் கலைகள் வளரத் தொடங்கின.
- இடைக்காலத்தின் பிற்பகுதியில் அறிவியல் வளர்ச்சி ஐரோப்பாவில் உச்சக்கட்டத்தை அடைந்தது. பைசாண்டிய பேரரசர்களான ஆறாம் லியோ, ஏழாம் கான்ஸ்டன்டைன் விண்ணியல் அறிவியலுக்கு முக்கிய பங்காற்றினர்.
- படையெடுப்புகள் காரணமாக ஐரோப்பிய மன்னர்களும் வீரர்களும் ஆசிய நாடுகளை நேரடியாக காணும் வாய்ப்பினை பெற்றனர்.
- அவர்களை எதிர்த்து போரிட்டு இஸ்லாமியர்கள் இந்தியா சீனா போன்ற பழம்பெரும் பண்பாட்டு சிறப்புமிகு நாடுகளோடு கொண்ட தொடர்பு காரணமாக அறிவியலில் வெகுவாக முன்னேறி இருந்தனர்.
- கிபி 9 மற்றும் 10 ஆம் நூற்றாண்டுகளில் அரேபியர் கிரேக்கம் மற்றும் கீழை நாட்டு அறிவியல் நூற்களை மொழிபெயர்த்தது போல் கிபி 12ஆம் பதிமூன்றாம் நூற்றாண்டில் ஐரோப்பியர் அரேபிய, அறிவியல் நூற்களை மொழிபெயர்க்கத் தொடங்கினர்.
- ரோஜர் பேகனின் மிகவும் குறிப்பிடத்தக்க தத்துவ சாதனைகள் கணிதம், இயற்கை அறிவியல் மற்றும் மொழி ஆய்வுகள் ஆகிய துறைகளில் இருந்தன.

- இக்கால அறிவியல் அறிஞர்களும் தலைசிறந்தவர் ரோஜர் பேகன்ஆவார். இவர் இடைக்காலம் தற்காலமாக மறுமலர்ச்சி அடைய காரணமாக இருந்தார்.
- இடைக்காலத்தில் எழுந்த பல்வேறு இடையூறுகளுக்கு மத்தியில் அவர் ஓபஸ் மாஜஸ் என்ற நூலை எழுதினார்.
- 1272 இல் இங்கிலாந்து திரும்பிய அவர் தம் நூலில் சமய விரோத கருத்துக்களை கூறியுள்ளார் என குறிப்பிடப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார்.
- அவரது அறிவியல் கருத்துக்கள் பல கண்டுபிடிப்புகளுக்கு வழிவகுத்தன. அவர் பரிசோதனை செய்து பார்க்கும் உரிமையை மிகவும் வலியுறுத்தினார்.
- மூக்கு கண்ணாடி, தானே செல்லும் கப்பல்கள் ,சூரிய கிரகணத்தை பார்க்கும் கேமரா ஆகியவை பற்றியும் தெரிவித்தார். சில நீரியல் மற்றும் பொறியியல் கருவிகளை உருவாக்கினார்.
- 15 மற்றும் 17 ஆம் நூற்றாண்டுகளில், வானியல், மருத்துவம், இயற்பியல், உயிரியல் மற்றும் வேதியியல் ஆகிய துறைகளில் புதிய சிந்தனைகளும் அறிவும் தோன்றின.
- இந்த சகாப்தத்தில் பிறந்த கருத்துக்கள் இயற்கையின் பண்டைய மற்றும் இடைக்கால பார்வையை மாற்றி நவீன அறிவியலின் அடித்தளத்தை தயார் செய்தன.
- அதனால்தான் இந்த சகாப்தம் அறிவியல் புரட்சி என்று அழைக்கப்படுகிறது.
- இடைக்காலம் முடிவடைந்து நவீன காலம் தொடங்குவதற்கு காரணமாக இருந்த இயக்கம் மறுமலர்ச்சி இயக்கம் ஆகும்.
- பதினாறாம் நூற்றாண்டில் ஐரோப்பிய மக்களின் அணுகுமுறையில் ஏற்பட்ட மாற்றங்களைக் குறிப்பதுதான் இந்த மறுமலர்ச்சி இயக்கம் ஆகும்.
- 1453 இல் கான்ஸ்டாண்டிநோபிள் நகரை சீக்கியர்கள் தாக்கி கைப்பற்றியது அங்குள்ள கிரேக்க அறிஞர்கள் தங்கள் சமயத்திற்கும் பண்பாட்டிற்கும் பகைவர்களான துருக்கியின் ஆதிக்கத்தை வெறுத்து ஐரோப்பிய நகரங்களில் புகலிடம் தேடி வந்தனர்.

**குறிப்பு**

- அவர்கள் கொண்டு வந்த கலை இலக்கியங்களை ஆர்வமுடன் ஐரோப்பியர்கள் வரவேற்றனர்.
- ஜெர்மனியைச் சேர்ந்த ஜான் கூட்டன்பர்க் என்பவர் கிபி 1250 மெயின்ஸ் நகரில் அச்சு இயந்திரத்தை நிறுவினார்.
- அந்த அச்சுஇயந்திரம் புதிய கல்வி விரைவாகவும் மலிவாகவும் மக்கள் மத்தியில் பரவ பெரிதும் உதவி புரிந்தது. அதன் மூலம் பல நூல்கள் அச்சிடப்பட்டன.
- நவீன வானியலின் தந்தை என அழைக்கப்படும் நிக்கோலஸ் கோப்பர்நிக்கஸ் ஒரு போலந்து துறவி மற்றும் வானியலாளர் ஆவார்.
- அவர் சூரிய குடும்பத்தின் சூரிய மையக் கோட்பாட்டை உருவாக்கினார்.
- சூரியன் பிரபஞ்சத்தின் மையத்தில் இருக்கிறது, பூமியும் மற்ற கோள்களும் சூரியனை சுற்றி வட்டமாக பாதையில் செல்கின்றன. பூமி தனது அச்சில் சுழல்கிறது, பூமியின் சுழற்சியால் இரவு பகல் ஏற்படுகின்றன,
- பூமி சூரியனைச் சுற்றுவதால் பருவங்கள் உண்டாகின்றன. மேலும் நட்சத்திரங்கள் வெகு தூரத்தில் உள்ளதால் அவை சூரியனை சுற்றி வரவில்லை என்றும் சூரிய குடும்பத்தில் உள்ள ஒரு சிறிய கோள் நாம் வசிக்கும் பூமி என்றும் கோபர்நிகஸ் கூறுகிறார்.
- ஜோகன்னஸ் கெப்ளர் உலகம் போற்றும் வானியல் ஆராய்ச்சியாளர் ஆவார்.
- கணித விஞ்ஞானியாக இருந்த இவர் கோள்களின் சுழற்சி குறித்த திட்டவட்டமான கோட்பாடுகளை உருவாக்கினார்
- கெப்ளரின் ஆராய்ச்சிக் குறிப்புகள் அவரது ஒரு புதிய வானியல் என்ற நூலில் விளக்கப்பட்டுள்ளது. இந்த நூலில் வான் கோள்களின் இயக்கம் பற்றிய முதல் இரண்டு விதிகளை விளக்கியிருந்தார்.
- பத்து ஆண்டுகளுக்குப் பிறகு தனது மூன்றாவது விதியை வெளியிட்டார்

## 4.9 முக்கிய வார்த்தைகள்

மனித உடலியல்: இது ஒவ்வொரு உயிரினத்திலும் உள்ள பல்வேறு அமைப்புகளில் உடல் மற்றும் அதன் செயல்பாடுகள் பற்றிய ஆய்வு ஆகும்.

மந்தநிலை: இது எந்த ஒரு இயற்பியல் பொருளின் வேகத்தில் ஏற்படும் எந்த மாற்றத்திற்கும் எதிர்ப்பாகும்.

மறுமலர்ச்சி: மறுபிறப்பு அல்லது புதுப்பித்தல் என்று பொருள். ஒரு கலாச்சார இயக்கமாக, அதன் தோற்றம் 14 ஆம் நூற்றாண்டுக்கு செல்கிறது, மேலும் 16 ஆம் நூற்றாண்டில் அது ஐரோப்பா முழுவதும் பரவியது.

கருத்து வேறுபாடுகள்: இது மற்றொரு நபரின் கருத்துக்கள் அல்லது கொள்கைகள் மீதான ஆக்கிரமிப்பு தாக்குதல் அல்லது மறுப்பு.

## 4.10 சுய மதிப்பீடு கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுவிடை வினாக்கள்**

1. அறிவியல் புரட்சியின் குறிப்பிடத்தக்க அம்சங்களைக் குறிப்பிடவும்.
2. ரோஜர் பேகன் வரையறுத்தபடி அறிவைப் பெறுவதற்கான மூன்று வழிகள் யாவை?
3. கோப்பர்நிக்கன் புரட்சி என்று ஏன்அழைக்கப்படுகிறது?

**நெடுவிடைவினாக்கள்**

1. ‘மறுமலர்ச்சி என்பது இடைக்கால காலத்திற்கும் நவீன யுகத்திற்கும் இடையிலான முக்கிய இணைப்பாக நிரூபிக்கப்பட்டது.’ அறிக்கையை விவரி.
2. வானியல் துறையில் நிக்கோலஸ் கோப்பர்நிக்கஸின் முக்கிய பங்களிப்பைப் பற்றி விவாதிக்கவும்.
3. கெப்லரின் முக்கிய கண்டுபிடிப்புகளை பற்றி விவாதிக்கவும்.

## 4.11 மேலும் வாசிப்புகள்

1. ராஜாராம், கல்பனா. இந்தியாவில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம். இந்தியா: ஸ்பெக்ட்ரம் புக்ஸ் பிரைவேட் லிமிடெட் , 2012.

2. ஹால்டேன், ஜே. பி.எஸ். அறிவியல் மற்றும் இந்திய கலாச்சாரம். இந்தியா: நியூ ஏஜ் பப்ளிஷர்ஸ் பிரைவேட் லிமிடெட், 1965.

3. குப்புராம், ஜி. இந்தியாவில் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப வரலாறு. இந்தியா: தெற்காசியா புத்தகங்கள், 1990.

4. பேரா.வி.முருகன், வரலாற்றில் அறிவியல், பாரதி புத்தகாலயம், சென்னை, 2021

5. எஸ்.வர்கீஸ் ஜெயராஜ், அறிவியல் தொழில்நுட்ப வரலாறு, பாவை பதிப்பகம், 2010

# அலகு – 5

## கலிலியோ – குட்டன்பெர்க் – அறிவியல் கழகங்கள் நிறுவுதல்- ஐசக் நியூட்டன் - வில்லியம் ஹார்வி.



## 5.0 அறிமுகம்

கலிலியோ, நியூட்டன், குட்டன்பெர்க் மற்றும் ஹார்வி ஆகியோர் தங்கள் முக்கிய கண்டுபிடிப்புகள் மற்றும் சாதனைகள் மூலம் அறிவியல்

புரட்சிக்கு மகத்தான பங்களிப்பை வழங்கினர். கலிலியோ ஒரு புதுமையான மற்றும் பரிசோதனை அடிப்படையிலான அணுகுமுறையை ஏற்றுக்கொண்டார், இது அறிவியல் புரட்சியின் முக்கிய நபர்களில் ஒருவராக மாறியது. அதேபோல், ஐசக் நியூட்டன் அங்கீகாரத்தையும் புகழையும் பெற்றார்

1668 இல் தொலைநோக்கியை கண்டுபிடித்ததன் மூலம். வில்லியம் ஹார்வி இந்த காலகட்டத்தின் மற்றொரு குறிப்பிடத்தக்க நபராக இருந்தார், அவர் பல சோதனைகளை நடத்தி முழு மனித உடலிலும் இரத்த ஓட்டத்தை உறுதிப்படுத்தினார்.

## 5.1 குறிக்கோள்கள்

இந்த அலகின் முடிவில் கீழ்க்கண்டவற்றைத் தெரிந்துகொள்ள முடியும்.

- கலிலியோ மற்றும் குட்டன்பெர்க்கின் பங்களிப்பை விளக்குதல்
- அறிவியல் கல்விக்கூடங்களை நிறுவுவது பற்றி விவாதித்தல்
- நியூட்டன் மற்றும் வில்லியம் ஹார்விஆகியோரின் படைப்புகளை விவரித்தல்

## 5.2 கலிலியோ

பதினேழாம் நூற்றாண்டில் இத்தாலி நாட்டில் மிகச்சிறந்த அறிவியல் அறிஞராக விளங்கியவர் கலிலியோ கலிலி என்பவர் ஆவார். விண்ணியல், இயற்பியல், கணிதம் ஆகிய துறைகளில் வல்லுனரான அவர் அறிவியல் கோட்பாடுகள் பரிசோதனை மூலம் கணிதவியல் முறையில் நிரூபிக்கப்பட வேண்டும் என்று அறிவித்தார். அவரது வானியல் ஆராய்ச்சிகள், தொலைநோக்கி கண்டுபிடிப்பு, சமத்துவ விதி, கோபர் நிக்கஸ் இன் கோட்பாடுகளை இவர் நிரூபித்தது ஆகிய அறிவியல் கண்டுபிடிப்புகள் இவருக்கு பெரும் புகழைத் தேடித் தந்தன. எனவே தான் இவர் விஞ்ஞானத்தின் தந்தை என்று போற்றப்படுகிறார்.

இத்தாலி நாட்டில் உள்ள பைசா என்ற நகரில் கிபி 1564 ஆம் ஆண்டு பிறந்தார். கலிலியோ சிறுவயது முதலே எதனையும் கூர்ந்து ஆராயும் குணம் கொண்ட கலிலியோ இளம் வயதில் தான் ஒரு கணிதக் கலை நிபுணராகவும் அறிவியல் நிபுணராகவும் மாற வேண்டும் என்று

விரும்பினார். ஆனால் கலிலியோவின் தந்தை அவரை மருத்துவம் படிக்க வைக்க விரும்பினார். 1581 இல் கலிலியோ பைசா நகர பல்கலைக் கழகத்தில் மருத்துவப் படிப்பில் சேர்ந்தார். ஆனாலும் அவருக்கு கணிதத்தின் மீது இருந்த ஆர்வம் குறையவில்லை. அவரது குடும்பத்திற்கு போதிய வருமானம் இல்லாத காரணத்தினால் அவரால் தொடர்ந்து மருத்துவ படிப்பை முடிக்க முடியவில்லை. ஆகையால் தனது நண்பர்களின் உதவியோடு அவர் மருத்துவம் பயின்ற அதே பல்கலைக்கழகத்தில் கணிதப் பேராசிரியராக பணியில் சேர்ந்தார். பின்னர் பதுவா பல்கலைக்கழகத்தில் பணியில் சேர்ந்த அவர் தான் அங்கு பணிபுரிந்த காலத்தில் பல்வேறு அறிவியல் கண்டுபிடிப்புகளை கண்டுபிடித்தார்.

**கலிலியோவின் அறிவியல் கண்டுபிடிப்புகள்**

**வானியல் உண்மைகள்**

தொலைநோக்கியைக் கண்டுபிடித்தது அறிவியல் உலகின் மிக முக்கியமான திருப்பு முனையாகும். ஒருமுறை அவர் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கும்போது கனமானதும் புற வளைவுள்ள ஒரு குவி ஆடியையும் உட்குழிந்த மற்றொரு குவி ஆடியையும் ஒன்றன் முன்மற்றொன்றை வைத்து பொருத்திப் பார்த்தார். தொலைவிலுள்ள பொருள் அருகில் இருப்பது போல தெரிந்தது. அதன்பின் அதிக திறன் வாய்ந்த ஒரு டெலஸ்கோப்பை அவர் தயாரித்தார். 30 மடங்கு உருப்பெருக்கிக் காட்டும் ஒரு தொலைநோக்கியை உருவாக்கினார். அந்த தொலைநோக்கிதான் விண்ணியலில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடக்கி வைத்தது.

1607 ஆம் ஆண்டு கலிலியோ அவரே தயாரித்த தொலைநோக்கி மூலம் பல விண்ணியல் உண்மைகளை கண்டறிந்து கூறினார். சந்திரனின் மேற்பரப்பை ஆராய்ந்த அவர் அங்கே ஏராளமான பள்ளங்களும் உயர்ந்த மலைகளும் இருக்கின்றன என்று கண்டறிந்து கூறினார் .அந்த மலைகளின் நிழல்களைக் கொண்டு அதன் உயரங்களை கண்டுபிடித்தார். விண்வெளி பொருள்களால் வழவழப்பானவை அல்ல என்றும் அவைகளில் ஒழுங்கின்மைகள் காணப்படுகின்றன என்றும் முடிவுசெய்து கலிலியோ கூறினார். வியாழனுக்கு மூன்று துணைக்கோள்கள் இருக்கின்றன என்று கூறிய கலிலியோ பூமி அல்லாத வேறு ஒரு

கோளத்தையும் ஒரு கோளம் சுற்றி வரலாம் என்று தெளிவுபடுத்தினார். வெள்ளி கிரகம் சந்திரனை போன்ற தோற்றங்களை கொண்டுள்ளது என்றும் அவர் ஆய்வு செய்து கூறினார்.

சனிக்கிரகம் மூன்றாக பிரிக்கப்பட்டு உள்ளது என்று தெரிவித்தார். சனி கிரகத்தை சுற்றியுள்ள வளையங்கள் கண்டு வியந்த கலிலியோ பலமுறை இது பற்றி ஆராய்ச்சி செய்தார். இந்த வளையங்களுக்கு சனிக்கிரகத்தின் காதுகள் என்று பெயரிட்டு அழைத்தார். பால்வீதி மண்டலத்தையும் ஆராய்ந்த அவர் அது மேகம்போன்ற தன்மையுடையது என்றும் மிக தொலை தூரத்தில் இருப்பதால் நம் கண்களுக்கு புகைப் மண்டலம் போன்று தோற்றமளிக்கும் என்றும் கூறினார். அது கோடிக்கணக்கான தனித்தனி விண்மீன்களின் கூட்டம் என்பதை அவர் கண்டறிந்து கூறினார்.

சூரியனை ஆராய்ந்த கலிலியோ அதில் சூரிய கரும்புள்ளிகள் இருப்பதையும் கண்டறிந்தார். இதற்கு முன்பு பலர் இதனை கண்டுபிடித்து இருந்தாலும் கலிலியோ தான் முதன்முதலில் சூரிய கரும் புள்ளிகள் பற்றி தனது நூல் மூலம் உலகின் கவனத்திற்கு கொண்டு வந்தார்.

**ஊசல் கோட்பாடு**

1584 இல் கலிலியோ பைசா பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்தபோது பைசா நகரத்தில் இருந்த மாதா கோவில் வழிபாட்டிற்கு சென்றிருந்தார். அங்கு தொங்கிக்கொண்டிருந்த விளக்கு ஒன்று காற்றில் ஊசலாடுவதை கவனித்தார். அந்த விளக்கின் முன் பின் அசைவுகள் ஒரே அளவில் இருந்ததே கவனித்த அவர் அதைப் பற்றி ஆய்வு செய்தார். வீடு திரும்பிய நிலையில் தன அறையில் இருந்த ஒரே நீளமுள்ள இரு கயிறுகளை எடுத்தார். அதன் முனையில் ஒரே எடையுள்ள குண்டுகளை கட்டினார். பிறகு இரு கயிறுகளையும் ஒரே நேரத்தில் அசையவிட்டார். பின்னர் வெவ்வேறு நீளமுள்ள கயிறுகளைக் கட்டி அதேபோல ஆடவிட்டார். ஒவ்வொரு முறையும் அசையும்தூரங்கள் வேறுபட்ட போதிலும் அசைவுகளின் எண்ணிக்கை ஒன்றாக இருந்தது. பின்னர் வெவ்வேறு கணம் கொண்ட குண்டுகளை கட்டி அசையவிட்டார். கனம் எவ்வளவு இருப்பினும் அதன் நீளம் ஒன்றாக இருக்கும் போது அசைவு காலம் ஒன்றாக இருப்பதை அறிந்த கலிலியோ இதிலிருந்து தனி ஊசல் கோட்பாட்டை கண்டுபிடித்தார். ஊசலின் வீச்சு

குறைந்துகொண்டே வந்ததெனினும் ஊசல் நேரம் ஒரே அளவாக இருந்ததை இதன் மூலம் அவர் நிரூபித்தார். இது மிக முக்கியமான கண்டுபிடிப்பாகும். இந்த அறிவியல் உண்மையை அடிப்படையாகக் கொண்டு பிற அறிவியல் நிபுணர்கள் மனித இதயத்துடிப்பு மற்றும் கடிகாரங்கள் சூரிய கிரகணங்கள் நட்சத்திரங்களின்இடப்பெயர்சிகள் ஆகியவற்றை கணக்கிடுகின்றனர்.

**பிற கண்டுபிடிப்புகள்**

கிரேக்க தத்துவஞானி அரிஸ்டாட்டில் அவரின் கண்டுபிடிப்பில் லேசான பொருட்களை விட கனமான பொருள்கள் வேகமாக கீழே விழும் என கணித்து கூறியிருந்தார். இந்த கூற்றை அறிவியல் உலகம் நீண்ட நெடுங்காலமாக நம்பி வந்தது. ஆனால் இதை பரிசோதனை செய்து பார்க்க விரும்பிய கலிலியோ பல தொடர்ச்சியான பரிசோதனைகள் மூலம் இந்தக் கூற்று தவறானது என்பதை கண்டுபிடித்தார். இதை நிரூபிக்கும் விதமாக பைசா நகரத்து சாய்ந்த கோபுரத்தின் உச்சியிலிருந்து மாறுபட்ட எடை அளவு பொருட்களை கீழே போட்டு கனமான பொருட்கள் ஒரு இடத்தில் ஒரு வெற்றிடத்தில் விரைவாக கீழே விழும் என்று அரிஸ்டாட்டில் கருத்தை தவறு என்று நிரூபித்தார். உராய்வினால் வேகம் சற்று குறையலாம் என்பதை தவிர கனமான லேசான பொருள்கள் இரண்டுமே ஒரே வேகத்தில் கீழே விழுகின்றன என்று கூறினார். இதைக் கண்டுபிடித்த பின்னர் ஒரு குறிப்பிட்ட கால அளவின் போது பொருள்கள் எவ்வளவு தூரம் விழுகின்றன என்பதை மிக கவனமாக அளவீடு செய்தார். கீழே விழுகின்ற ஒரு பொருள் செல்லும் தொலைவானது அது கீழே விழுகின்ற வினாடிகளில் இருபடி வர்க்கத்திற்கு சரிசமவீத அளவில் இருக்கும் என்பதையும் கண்டுபிடித்தார். இது மிக முக்கியமான ஒரு கண்டுபிடிப்பாகும்.

அடுத்ததாக, இயங்கும் பொருள்களின் வேகம் சிறிது சிறிதாக குறைந்து கொண்டே வந்து அதனை மற்றொரு விசையினால் மீண்டும் முடுக்கி இயக்காவிடில் இயக்கம் நின்றுவிடும் என்று நீண்ட காலமாக மக்கள் நம்பி வந்தார்கள். இந்த பொதுவான கூற்றும் தவறானது என்று கலிலியோ பரிசோதனைகள் மூலம் நிரூபித்து காட்டினார். உராய்தல் போன்ற வேகத்தை குறைக்கும் விசைகளை அடியோடு நீக்கி விட முடியுமாயின் இயங்கும் ஒரு பொருள் இடைவிடாமல் தொடர்ந்து

குறிப்பு

இயங்கிக்கொண்டே இருக்கும் என்று கலிலியோ கூறினார். இதிலிருந்து உந்து விசையால் தள்ளப்பட்ட கோள்கள் தானாகவே தங்களுடைய வட்டப்பாதையில் சூரியனைச் சுற்றி வருவதாக கண்டார்.
ஒரு குழியில் உள்ளிருக்கும் காற்று வெப்பத்தால் விரிவடைவதைக் கண்ட அவர் வெப்பநிலையை அளவிட உதவும் காற்று வெப்பமானியை கண்டுபிடித்தார். பொருட்கள் விழும் வேகத்திற்கும் நேரத்திற்கும் தொடர்பு இருப்பதாகவும் அவர் கருதினார்.

**திருச்சபையின் எதிர்ப்பு**

கலிலியோ பைபிள் கூறிய கருத்துக்களுக்கு முரணான கருத்துக்களைக் கூறியதோடு அவற்றை தன் ஆய்வின் மூலம் நிரூபித்துக் காட்டினார். பைபிள் கூறும் இயற்கை அமைப்பு கருத்துக்கள் அறிவியலுக்குப் பொருந்தாதவை என்றும் இயற்கைப் பொருள்களைப் பற்றிய மனித அறிவு அறிவினாலும் பகுத்தறிவு தெரிந்து கொள்ளப்பட்ட உண்மைகளே என்றும் கூறினார். இவ்வாறு கலிலியோ கோபர்நிக்கசின் கோட்பாடுகளை ஆதரித்ததால் அவருக்கு திருச்சபையில் எதிர்ப்பு ஏற்பட்டது.

1632 விண்ணியல் பற்றிய தமது கருத்துக்களை இரு பெரிய உலக அமைப்புகளைப் பற்றிய உரையாடல் என்ற நூலில் வெளியிட்டார் இதில் டாலமியின் கருத்துக்களையும் கோபர்நிக்கஸின் கருத்துக்களையும் அலசி ஆராய்ந்த அவர் கோபர்நிக்கசின் கருத்துக்கள்தான் உண்மையானவை என்று நிரூபித்திருக்கிறார். மேலும் இன்றைய சமய நம்பிக்கைகளையும் அவர் விமர்சனம் செய்திருந்தார். ஆனால் கோபர்நிகஸின் கோட்பாடுகள் திருச்சபை கொள்கைகளுக்கு புறம்பானது என்று கூறி போப் அவரது நூலை தடை செய்திருந்தார். கலிலியோவின் கருத்துக்கள் அரிஸ்டாடிலின் கொள்கைகளுக்கும் எதிராக இருந்ததால் பலர் அதற்கு எதிர்ப்பு தெரிவித்தனர்.

அரிஸ்டாட்டிலின் பூமி மையக் கொள்கையை புறக்கணித்து பூமிதான் சூரியனைச் சுற்றி வருகிறது என்ற கோபர்நிகஸின் கோட்பாடுகளை கலிலியோ ஆதரித்து எழுதியது திருச்சபை அதிகாரிகளைக் கோபப்படுத்தியது. எனவே சமய விரோதி என்று கலிலியோவை திருச்சபை அதிகாரிகள் குற்றம் சுமத்தினர் .அவரது கொள்கைகளைத் திரும்பப் பெறுமாறு அவர் கட்டாயப்படுத்தப்பட்டார்.

பிளாரன்ஸ் நகருக்கு அருகில் உள்ள தனது வீட்டிலேயே அவர் முடங்கிக் கிடந்தார். ஆனாலும் ரகசியமாக தன் ஆராய்ச்சிகளை நடத்தி மேலும் பல அறிவியல் உண்மைகளை கண்டுபிடித்தார். புதிதாக பதவியேற்ற போப் 1616 இல் விதிக்கப்பட்ட தடையை நீக்கினார். ஆனாலும் அவர் வெளியிட்ட நூல்கள் கோபர்நிகஸின் கருத்தை வலியுறுத்தியே இருந்ததால் அவர் மீது குற்றம் சாட்டப்பட்டு அவருக்கு தண்டனை வழங்கப்பட்டது. தண்டனைப்படி கலிலியோ அவரது வீட்டிலேயே வீட்டுக்காவலில் வைக்கப்பட்டார்.அறிவியல் கோட்பாடானது பரிசோதனை மூலம் தான் நிரூபிக்கப்பட வேண்டும் என்பதே அவரது கொள்கை ஆகும். அறிவியலில் கணிதவியலின் இன்றியமையாத் தன்மையையும் வலியுறுத்தினார். இயற்பியலானது உண்மையில் கணிதவியலைத்தான் அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பதையும் நிரூபித்தார். ஆனால் விண்ணியலில் புதிய கோட்பாடுகளை எதனையும் அவர் வெளியிடவில்லை. மாறாக கோபர்நிகஸின் கொள்கைகளைத் தான் தமது நூல்கள் மூலம் வெளிப்படுத்தினார். அதன் காரணமாக அன்றைய உலகின் சக்திவாய்ந்த அதிகார மையமான திருச்சபையை எதிர்த்து போராட நேர்ந்தது.

**கலிலியோவின் எழுத்துக்கள்**

1586 இல், கலிலியோ லா பில்லன்செட்டா (தி லிட்டில் பேலன்ஸ்) என்ற புத்தகத்தை எழுதினார். இந்த புத்தகம் காற்றிலும் நீரிலும் உள்ள பொருட்களை துல்லியமாக எடைபோடக்கூடிய சமநிலையின் பயன்பாட்டை விவரிக்கிறது. 1606 ஆம் ஆண்டில், அவர் டுந ழிநசயணைழினெ னநட ஊழஅியளளழ புநழஅநவசஉைழநவ ஆடைவையசந என்ற தலைப்பில் ஒரு கையேட்டை எழுதினார், இது வடிவியல் மற்றும் இராணுவ திசைகாட்டியின் பயன்பாட்டை விவரிக்கிறது.1610இல், அவர் தி ஸ்டாரி மெசஞ்சர் (ளுனைநசநரள ரேஉெரைள) எழுதினார்.சந்திரனில் மலைகள் இருப்பது, பால்வீதியின் தோற்றம் மற்றும் கலிலியன் நிலவுகளின் கண்டுபிடிப்பு போன்ற அவரது கண்டுபிடிப்புகள் இந்த அறிவியல் கட்டுரையில் அடங்கும். 1613 ஆம் ஆண்டில், அவர் சூரிய புள்ளிகள் பற்றிய கடிதங்களை எழுதினார், அதில் அவர் சூரிய புள்ளிகளை விரிவாக விவரித்தார். இந்த

புத்தகத்தில் வீனஸின் கட்டங்கள் மற்றும் சனியின் "பின் இணைப்புகள்" தொடர்பான அவரது கருத்துக்களும் அடங்கும்.

குறிப்பு

**கலிலியோ எழுதிய மற்ற சில புத்தகங்கள் பின்வருமாறு:**

- மிதக்கும் உடல்கள் பற்றிய சொற்பொழிவு (1612)
- கிராண்ட் டச்சஸ் கிறிஸ்டினாவுக்கு கடிதம் (1615 இல் எழுதப்பட்டது மற்றும் 1636 இல் வெளியிடப்பட்டது)
- அலைகள் பற்றிய சொற்பொழிவு (1616)
- தி அஸ்ஸேயர் - இல் சாகியோடோர் (1623)
- இரண்டு தலைமை உலக அமைப்புகள் பற்றிய உரையாடல் (1632)
- இரண்டு புதிய அறிவியல்கள் தொடர்பான சொற்பொழிவுகள் மற்றும் கணித விளக்கங்கள் (1638)

## 5.3 கூட்டன்பெர்க்

அறிவியல் கண்டுபிடிப்புகளுள் மிகச் சிறந்த ஒன்று அச்சு இயந்திரம் ஆகும். இதைக் கண்டறிந்தவர் ஜெர்மனை சேர்ந்த ஜோகன் கூட்டன்பர்க் ஆவார். இயங்கக்கூடிய எழுத்துருவையும் அச்சு இயந்திரத்தையும் பயன்படுத்தி அச்சிடும் முறையை முதலில் கண்டுபிடித்தார். கிபி 1400 ஜெர்மனியில் உள்ள மெயின்ஸ் என்ற நகரத்தில் பிறந்தார். கூட்டன்பர்க்கின் தந்தை மெயின்ஸ் நகரத்தின் அரசாங்கத்தின் தலைவராக இருந்த காரணத்தினால் இவர் ஒரு முறை தனது தந்தையுடன் அந்த நாணய சாலைக்கு சென்றார். அங்கு அந்த நாணயங்கள் மீது எழுத்துக்களையும் உருவங்களையும் பொற்கொல்லர்கள் பொறிக்கும்முறையை உற்றுக் கவனித்தார். அவற்றின்பால் ஈர்க்கப்பட்ட இவர் கிறிஸ்தவ மடாலயங்களுக்கு சென்றபோது அங்கிருந்த துறவிகள் மிகுந்த சிரமத்தோடு கையெழுத்துப் பிரதிகள் தயார் செய்வதையும் கண்டு இதற்கு ஒரு மாற்று ஏற்பாடு செய்ய வேண்டும் என்று எண்ணினார். அதன் காரணமாக வெனிஸ் நகரில் ஒரு பொற்கொல்லரிடம் உலோகத்தொழிலில் தனது திறமையை வளர்த்துக் கொண்டார். பலவகையான உலோகப் பொருட்கள் செய்யும் முறையை தெரிந்து கொண்டார். இதன்மூலம் இவர் பெற்ற அனுபவங்கள்

பின்னாளில் அச்சியந்திரம் உருவாக்குவதற்கு இவருக்கு பெரிதும் உதவி செய்தது.

கூட்டன்பர்குக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பே சீனாவில் அச்சுப்பாள முறை கையாளப்பட்டு வந்தது. கிபி 868 அச்சிடப்பட்ட அச்சுப்புத்தகம் ஒன்று சீனாவில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஒரு நூலில் பல அச்சுப்படிகளை எடுப்பதற்கு அச்சுப்பாள முறையில் முடிகிறது என்றாலும் சீனாவில் பதினோராம் நூற்றாண்டில் மத்திய காலத்தில்தான் இயங்கக்கூடிய எழுத்துரு கண்டுபிடிக்கப்பட்டது. அது மண்ணால் ஆனது. எனவே இந்த எழுத்துரு நீடித்து உழைக்க கூடியது அல்ல. ஆனால் இவற்றை ஐரோப்பியர்கள் கற்றுக் கொள்ளவில்லை. இயங்கக்கூடிய எழுத்துக்களை பயன்படுத்தி அச்சடிக்கும் கூட்டன்பர்க் வழியாக கண்டறிந்தனர்.

கூட்டன்பர்க் கண்டுபிடித்த அச்சு முறையானது நான்கு முக்கிய பகுதிகளை கொண்டது. முதலாவது இயங்கக்கூடிய எழுத்துரு ஆகும். இந்த எழுத்துருக்கள் ஒரு குறிப்பிட்ட நடைமுறைப்படி அளிக்கப்பட்டு ஒரு நிலையில் பொருத்தப்படுகின்றன. இரண்டாவது அச்சியந்திரம் மூன்றாவது பொருத்தமான அச்சுமை. நான்காவது அதற்கேற்ற காகிதம் போன்ற பொருத்தமான பொருள் ஆகும். பல ஆண்டுகளுக்கு முன்னரே சீனாவில் சாய்லூன் என்பவர் காகிதத்தை கண்டுபிடித்திருந்தார். காகிதத்தை பயன்படுத்தும் முறையில் கூட்டன்பர்க் காலத்திற்கு முன்பே பல மேம்பாடுகள் செய்யப்பட்டிருந்தன என்றாலும் மேற்கண்ட முறையில் நான்கு மொழிகளிலும் மிக முக்கியமான சீர்திருத்தங்களை கூட்டன்பர்க் செய்தார். எழுத்துருக்களை தயாரிப்பதற்கு பொருத்தமான ஒரு உலோக கலவையை கண்டுபிடித்தார். அதற்கு பொருத்தமான அச்சுஇயந்திரத்தையும் கண்டுபிடித்தார். கூட்டன்பர்க் இறுதியாக இரண்டு அச்சுக்கூடங்களை நிறுவினார். ஒன்று சாதாரண செய்திகளை அடிப்பதற்கும் மற்றொன்று பைபிள் அடிப்பதற்கும் நிறுவப்பட்டது. இந்த நிறுவனத்தை அமைக்க அவர் கடன் வாங்கும் நிலை ஏற்பட்டது .

கூட்டன்பெர்க் 1450 ஆம் ஆண்டில் அச்சு இயந்திரத்தைக் கொண்டு வர, தற்போதுள்ள சில தொழில்நுட்பங்களையும் சில சொந்த கண்டுபிடிப்புகளையும் எடுத்தார். அவர் கொண்டு வந்த ஒரு முக்கிய யோசனை அசையும் வகை. காகிதத்தில் மை அழுத்துவதற்கு மரத் தொகுதிகளைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக, பக்கங்களை விரைவாக

உருவாக்க குட்டன்பெர்க் நகரக்கூடிய உலோகத் துண்டுகளைப் பயன்படுத்தினார். கூட்டன்பெர்க் அச்சிடும் செயல்முறையின் மூலம் அனைத்து வழிகளிலும் புதுமைகளை அறிமுகப்படுத்தினார், இது பக்கங்களை மிக விரைவாக அச்சிட உதவுகிறது. அவரது அச்சகத்தில் ஒரு நாளைக்கு 1000 பக்கங்கள் அச்சிட முடியும், ஆனால் பழைய முறையில் 40-50 பக்கங்கள் மட்டுமே அச்சிட முடியும். இது ஒரு வியத்தகு முன்னேற்றம் மற்றும் ஐரோப்பாவின் வரலாற்றில் முதல் முறையாக நடுத்தர வர்க்கத்தால் புத்தகங்களை வாங்க அனுமதித்தது. முன் எப்போதும் இல்லாத அளவிற்கு அறிவும் கல்வியும் கண்டம் முழுவதும் பரவியது.அச்சு இயந்திரத்தின் கண்டுபிடிப்பு ஐரோப்பா முழுவதும் வேகமாக பரவியது, விரைவில் ஆயிரக்கணக்கான புத்தகங்கள் அச்சகங்களில் அச்சிடப்பட்டன.

அச்சகத்தில் இருந்து முதலில் அச்சிடப்பட்ட பொருள் ஒரு ஜெர்மன் கவிதை என்று கருதப்படுகிறது. மற்ற அச்சகங்களில் லத்தீன் இலக்கணங்கள் மற்றும் கத்தோலிக்க திருச்சபைக்கான இன்பங்கள் ஆகியவை அடங்கும். கூட்டன்பெர்க்கின் உண்மையான புகழ் கூட்டன்பெர்க் பைபிளைத் தயாரிப்பதில் இருந்து வந்தது. ஒரு பைபிள் பெரிய அளவில் தயாரிக்கப்பட்டது மற்றும் தேவாலயத்திற்கு வெளியே உள்ள அனைவருக்கும் இதுவே முதல் முறை. பைபிள்கள் அரிதாகவே இருந்தன, மேலும் ஒரு பாதிரியார் எழுத்துப்பெயர்ப்பதற்கு ஒரு வருடம் வரை ஆகலாம். கூட்டன்பெர்க் குறுகிய காலத்தில் சுமார் 200 பைபிள்களை அச்சிட்டார்.

எனவே அச்சு இயந்திரம் கண்டுபிடித்த பெருமை கூடன்பர்க்கிற்கே உரியது. அந்தப்பணியில் அவருக்கு பீட்டர் ஷீபர் மற்றும் ஜான்பஸ்ட் ஆகியோர் உறுதுணையாயிருந்தனர். உலோகத்தில் வார்க்கப்பட்ட நகர்த்தக்கூடிய அச்சு எழுத்துக்களை பயன்படுத்தி கையால் இயக்கப்படும் இயந்திரங்களின் உதவியால் அச்சடித்தனர். தொடக்கத்தில் எழுத்துக்கள் வார்ப்பதற்கு ஈயம் பயன்படுத்தப்பட்டது. ஆனால் நாளடைவில் தகரம் கலந்த உலோகக்கலவை பயன்படுத்தப்பட்டது.

**பயன்கள்**

நவீனகால மறுமலர்ச்சியை வேகப்படுத்தியத்தில் அச்சியந்திரத்தின் பங்கு முக்கியமானதாகும். இடைக்காலத்தில் நூற்கள்

தயாரிப்பது மிகக் கடினமான வேலையாக இருந்தது. மடாலயங்களில் ஓய்வு நேரங்களில் துறவிகள்தாம் இப்பணியில் ஈடுபட்டனர்.நூற்களின் விலை அதிகமாக இருந்ததால் எளிய மக்களால் நூற்களை வாங்கிப் பயில முடியவில்லை. நூற்கள் சமயகுருமார்கள் மற்றும் செல்வந்தர்களுக்கு மட்டுமே உரித்தானதாக இருந்தது. அதனால் சமுதாயத்தில் எழுத்தறிவின்மை பரவலாக இருந்தது. ஆனால் அச்சியந்திரம் கண்டுபிடிக்கப்பட்டதால் சமுதாயத்தில் புரட்சிகரமான மாறுதல்கள் நிகழ்ந்தன.

நூற்கள் விரைவாகத் தயாரிக்கப்பட்டன. மேலும் அவை மலிவானதாகவும், தரமானதாகவும் இருந்தன. எனவே சாதாரண மக்களும் வாங்கிப்படிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. அச்சியந்திரத்தினால் உருவான பல நூற்கள் மறுமலர்ச்சிக்கால கருத்துக்கள் மற்றும் கண்டுபிடிப்புகள் ஐரோப்பாவெங்கும் விரைவாகப் பரவக் காரணமாயிருந்தது. மேலும் அறியாமை அகன்று அறிவொளி எங்கும் சுடர்விட தூண்டுகோலாய் இருந்தது.

மறுமலர்ச்சி இயக்கத்தை தொடர்ந்து ஐரோப்பாவில் சமயச் சீர்திருத்த இயக்கம் தோன்றி வளர்வதற்கு உறுதுணையாய் இருந்தது. சீர்த்திருத்தக்காரர்களின் கருத்துப்படி விவிலியமே சமயக் கோட்பாடுகளின் உறைவிடமாக இருந்ததால் விவிலிய நூல் ஏராளமாக அச்சிடப்பட்டன.

**விளைவுகள்**

கூட்டன்பர்க்கின் சாதனை உலக அறிவியலரங்கில் மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியது. இந்தக் கண்டுபிடிப்பிற்குப்பின் ஐரோப்பா மிக வேகமாக முன்னேறியது. அச்சுப்பொறி கண்டுபிடிப்பு மனித வாழ்க்கையில் ஒரு புரட்சிகரமான மாறுதலை ஏற்படுத்தியது. இதன்மூலம் மறுமலர்ச்சி இயக்க கருத்துக்கள் மக்களிடையே வேகமாக பரவியது. அச்சுக்கலை கண்டுபிடிக்கப்பட்டதால் நூல்கள் அதிகப் பிரதிகள் அடிக்க முடிந்தது. மேலும் அந்த நூல்கள் குறைந்த விலையில் மக்களுக்கு கிடைத்ததன் காரணமாக செல்வந்தர்கள் பிரபுக்கள் மட்டுமே நூல்களை வாங்கிப் படிக்கும் பழக்கம் மாறி ஏழை எளிய மக்களுக்கும் நூல்கள் கிடைக்கும் நிலை ஏற்பட்டது. அச்சியந்திர கண்டுபிடிப்பினால் அறிவு வளர்ச்சி

காணப்பட்டது. ஐரோப்பிய மொழிகள் பலவும் இதன்மூலம் வளர்ச்சி அடைந்தன.



## 5.4 அறிவியல் கழகங்கள் நிறுவுதல்

17 ஆம் நூற்றாண்டில் அறிவியல் வேகமாக வளர்ச்சி அடைந்தது. இக்காலகட்டத்தில் அறிவியலின் எல்லாத் துறைகளும் ஒட்டுமொத்தமாக வளர்ச்சி அடைந்தன. அறிவியலாளர்கள் அகாடமி எனப்பட்ட கழகங்களை ஏற்படுத்தினர். விஞ்ஞானிகள் அனைவரும் அந்த அகாடமியில் கூடி அறிவியல் வளர்ச்சிக்கு பாடுபட்டனர். கிமு ஐந்தாம் நூற்றாண்டிலே அறிவியலாளர்கள் அகாடமி ஒன்றை நிறுவி இலக்கியம் தத்துவம் சட்டம் போன்றவற்றை உரையாடல்கள் மூலம் வளர்த்தனர். ஆனால் பதினேழாம் நூற்றாண்டில் தான் அறிவியல் ஒரு நிறுவனமாக மாறியது. விஞ்ஞானம் சமயத்தின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு முன்னேற்றப் பாதையை நோக்கி வேகமாக சென்றது. விஞ்ஞானிகள் தொடர்ந்து வளர்ச்சி அடைந்து ஒரு நிலையான சமூக அமைப்பாக மாறினர். லண்டன் ராயல் சொசைட்டியின் தான் ஐரோப்பாவில் முதலில் நிறுவப்பட்ட அறிவியல் கழகம் ஆகும். இவை பல்வேறு தொழில்நுட்ப ஆராய்ச்சிகளை மேற்கொண்டு பல புதிய அறிவியல் கண்டுபிடிப்புகள் ஏற்பட காரணமாக அமைந்தன.

**லண்டன் ராயல் கழகம்**

லண்டன் ராயல் கழகம் 1660 ஆம் ஆண்டு இங்கிலாந்தில் லண்டன் நிறுவப்பட்டது. இதன் முழுப்பெயர் இயற்கை அறிவாக்க மேம்பாட்டிற்கான லண்டன் ராயல் கழகம் என்பதாகும். இங்கிலாந்தில் மட்டுமன்றி வெளிநாடுகளில் வசிக்கின்ற அறிஞர்களும் இதில் உறுப்பினர்களாக சேர்த்துக் கொள்ளப்படுவார்கள். 16ஆம் நூற்றாண்டில் தாமஸ் கிரஷாம் என்பவர் இங்கிலாந்தில் புதிய அறிவியல் கருத்துக்களை பயிற்றுவிக்க முதன் முதலில் அறிவியல் கழகம் ஒன்றை நிறுவினார். இது கிரஷாம் கல்லூரி எனப்பட்டது. 100 ஆண்டுகள் நீடித்த இந்த அறிவியல் கழகத்தில் தான் லண்டன் ராயல் கழகம் தொடங்கப்பட்டது. இந்த அமைப்பின் நோக்கம் அறிவியல் தொழில்நுட்ப ஆராய்ச்சிகளை ஊக்குவிப்பதாகவும் மேலும் பல்வேறு அறிஞர்களும்

இந்த கழகத்தில் ஒன்றுகூடி அறிவியல் கருத்துக்களை விவாதிப்பதும் ஆகும். மேலும் அறிஞர்களின் கண்டுபிடிப்புகள் மற்றும் ஆய்வேடுகள் புத்தகங்களாகவும் ஆராய்ச்சிக் குறிப்புகளாகவும் வெளியிடப்படுகின்றன. பல துறைகளிலும் ஆராய்ச்சி செய்துவரும் அவர்களுக்கு உதவித்தொகை வழங்கி ராயல் கழகம் ஊக்கம் கொடுத்து வருகிறது. புதிய கண்டுபிடிப்புகளுக்கு அங்கீகாரம் கொடுத்து அவர்களுக்கு பதக்கம் வழங்கி பாராட்டுகிறது.

ஆங்கில அறிவியலாளர்கள் வாரம்தோறும் ஒன்று கூடி புதிய தத்துவம் அல்லது பரிசோதனை மூலம் பெறப்பட்ட அறிவாக்கம் பற்றி தங்களுக்குள் கலந்துரையாடுவது வழக்கமாயிருந்தது. இக்கூட்டங்களில் ராபர்ட் பாயில் என்பவர் முக்கிய பங்கு வகித்தார். இதன் முதல் தலைவராக அவர் ராபர்ட் முரே இருந்தார். இதன் முதல் கூட்டம் 1663 மே 13ல் நடைபெற்றது. இதில் 53 அறிவியலாளர்கள் கலந்து கொண்டார்கள். கூட்டத்தில் கலந்துகொண்டவர்கள் விவாதங்கள் மூலம் கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டனர். புதிய அறிவியல் கண்டுபிடிப்புகள் கூட்டத்தில் பரிசோதனைகள் மூலம் நிரூபிக்கப்பட்டன. மேலும் அருங்காட்சியகம் ஒன்றும் திறக்கப்பட்டது. அறிவியல் சம்பந்தமான ஆலோசனைகளை பல அரசுகளுக்கும் அறிவியல் உலகத்திற்கும் இந்த அமைப்பு வழங்குகிறது. அனைத்திற்கும் மேலாக அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி பற்றி மக்களிடம் ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தி வருகிறது. அறிவியல் கல்விக்கு முக்கியத்துவம் கொடுத்து அறிவியல் முயற்சிகளுக்கு முழு ஆதரவு கொடுத்து வருகிறது. இந்த ராயல் கழகமானது ஒரு ராயல் சாசனத்தின் மூலம் சுதந்திரமாக இயங்கி வரும் ஒரு அமைப்பாகும்.

ராயல் கழகம் தனது வெளியீடுகள் மூலம் புதிய அறிவியல் கருத்துக்களை பரப்பியது அவை தத்துவ பரிமாற்றங்கள் மற்றும் அறிவியல் தகவல் தொடர்பு ஆகும்.

**லண்டன் ராயல் கழகத்தின் பிற காரணிகள்**

- ராயல் கழகம் அரசுக்கு அவ்வப்போது பல ஆலோசனைகளை வழங்கியது.
- சிறைகளில் காற்றோட்ட வசதி அளிக்கும் முறைகளை இந்த அறிவியல் கழகம் கண்டுபிடித்தது

- கிரீன்விச்சில் உள்ள ராயல் வானிலை கூடத்தை பராமரித்து வந்தது.
- வெள்ளி கிரக ஆராய்ச்சி மேற்கொண்டது அதற்காக கேப்டன் ஜேம்ஸ் குக் தென் பசிபிக் கடல் பயணம் மேற்கொள்ள வேண்டிய உதவிகளை செய்தது.
- அட்ச ரேகைகளின் அளவுகளை துல்லியமாக மதிப்பிட்டு பயணத்திற்கு ஆர்டிக் ஆய்வு பயணத்திற்கு ஏற்பாடு செய்தது
- வானியல் துறையில் சீரமைப்பு பணியை மேற்கொண்டது
- கடலலைகள் இயற்கை வாயு சம்பந்தமான ஆய்வுகள் கடத்தியது
- ஆழ்கடல் ஆய்வினை மேற்கொண்டது சுரங்கங்களில் விபத்துக்களை தவிர்க்கும் வழி முறைகளை ஆராய்ந்து மேற்கிந்தியத் தீவுகளின் எரிமலைகள் பற்றிய ஆய்வு செய்தது
- 1919 மே 19 இல் நிகழ்ந்த சூரிய கிரகணத்தைப் ஆராய்ந்தது
- வெப்பமண்டல வியாதிகளைப் பற்றி ஆய்வு நடத்தியது
- புதிய கண்டுபிடிப்புகளுக்கு உரிமம் வழங்கியது
- காலத்திற்கேற்ற தொழில்நுட்பங்கள் பற்றிய ஆய்வுகள் செய்யப்பட்டன

**பிரெஞ்சு ராயல் அறிவியல் கழகம்**

பிரான்ஸ் நாட்டின் பூர்போன் வம்ச மன்னர்கள் குறிப்பாக பதினான்காம் லூயி கலை இலக்கிய வளர்ச்சிக்கு ஆதரவளித்தார். இவரது காலத்தில் சிற்பக் கலை, ஓவியக் கலை, இலக்கியம், அறிவியல் போன்ற அனைத்தும் போற்றி வளர்க்கப் பட்டன. இது குறுகிய காலத்தில் மேலும் சிறப்பு பெற்றது. கர்டினல் ரிச்சுலு காலத்தில் அமைக்கப்பட்ட ராயல் அறிவியல் கழகம் மிக முக்கிய பங்காற்றியது. பிரான்ஸ் நாட்டின் பாரிஸ் நகர விஞ்ஞானிகளை ஒன்று சேர்த்து இதை ஒரு அமைப்பாக உருவாக்கியவர் மேரி மெட்ரிக் என்பவராவார். பிரான்ஸ் நாட்டில் இருக்கக்கூடிய திறமைவாய்ந்த அறிவியலாளர்களின் நகரமாக இது விளங்கியது. 1666 ஆம் ஆண்டு பதினான்காம் லூயி மன்னரின் நிதி அமைச்சரான ஜீன்கால்பர்ட் என்பவரின் ஆதரவினால் இந்த பிஞ்சு ராயல் கழகம் நிறுவப்பட்டது. பாரிஸ் நகரில் வானிலை ஆராய்ச்சிக் கூடம் இந்த கழகத்தால் அமைக்கப்பட்டது. இது லண்டன் ராயல் கழகத்தின் போன்று அல்லாது பிரான்ஸ் நாட்டு அரசாங்கத்தின் ஆதரவைப் பெற்று வளர்ந்தது

இந்த அறிவியல் கழகத்தில் வானவியல் மற்றும் சூரிய சக்தி ஆகியவை மிகத் துல்லியமாக ஆராயப்பட்டன. இந்த அமைப்பின் மூலம் செவ்வாய் கோளுக்கும் பூமிக்கும் இடையே உள்ள தூரம் துள்ளியமாக கணக்கிடப்பட்டது. 14ஆம் லூயிகாலத்தில் அமைக்கப்பட்ட இந்த அறிவியல் கழகம் பல ஜெர்மானிய சிற்றரசர்களை அறிவியல் வளர்ச்சியில் ஆர்வம் கொள்ளத் தூண்டியது. அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சிக்கு பிரெஞ்சு அறிவியல் கழகம் மிக முக்கிய பங்காற்றியது.

## 5.5 ஐசக் நியூட்டன்

பதினேழாம் நூற்றாண்டின் தலைசிறந்த அறிவியலாளர் ஐசக் நியூட்டன் ஆவார். இவர் இங்கிலாந்தில் கி.பி. 1642 ஆம் ஆண்டு பிறந்தார். கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் படித்து பட்டம் பெற்ற அவர் அதே கல்லூரியில் கணித பேராசிரியராகவும் பணிபுரிந்தார். இவர் அங்கு பணியாற்றிக் கொண்டிருக்கும்போதே கண்ணாடி,இயற்பியல், வேதியியல் இறைஇயல் ஆகிய பல துறைகளில் ஆய்வு நடத்தினார். பின் நியூட்டன் தனது 30வது வயதில் கிபி 1672 இல் லண்டன் ராயல் கழகத்தில் சேர்ந்தார். அங்கு பணிபுரிந்து கொண்டிருக்கும் போதுதான் கிபி 1650இல் தமது புகழ்பெற்ற பிரின்சியே அதாவது இயற்கைத் தத்துவத்தின் கணித விதிகள் என்ற நூலை வெளியிட்டார். இதுவரை அறிவியலில் அதற்கு இணையான நூல் எதுவும் வெளியிடப்படவில்லை. 1703 ஆம் ஆண்டில் ராயல் கழகத்தின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார் ஐசக் நியூட்டன். அந்த அமைப்பில் இருபத்தி நான்கு ஆண்டு காலம் அவர் பதவி வகித்தார். 1705 இல் அவருக்கு ஆங்கில அரசு நைட் பட்டம் அளித்து கௌரவித்தது. பல்கலைக்கழக பிரதிநிதியாகவும் பாராளுமன்ற உறுப்பினராக அவர் பொறுப்பு வகித்துள்ளார்.

**ஐசக் நியூட்டனின் அறிவியல் கண்டுபிடிப்புகள்**

**ஒளியியல் கோட்பாடு**

நியூட்டன் 1672 இல் ஒளியைப் பற்றிய தனது ஆய்வுக் கட்டுரை ஒன்றை வெளியிட்டார். பொதுவாக ஒளியானது வெண்ணிறமாக தோன்றினாலும் பல நிறங்களில் கூட்டு ஒளி என்று கூறினார். ஒளி ஏழு நிறங்களால் ஆனது என்று நியூட்டன் பரிசோதனைகள் மூலம்

விளக்கினார். ஒரு கண்ணாடி பட்டகத்தில் இருட்டு அறையில் வெளியில் இருந்து ஒரு சிறு துளை மூலம் சூரிய ஒளியை செலுத்தி சுவரில் விழுந்த பிம்பத்தில் ஏழு நிறங்கள் கொண்ட நிறமாலை என்ற ஒளி பட்டை இருப்பதை நிரூபித்து காட்டினார். அதன்மூலம் வானவில் எவ்வாறு ஏற்படுகிறது என்பதையும் விளக்கினார். இந்த நிறமாலை ஊதா, அவுரி,நீலம், பச்சை, மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு என அவற்றின் முதல் எழுத்துக்களை சேர்த்து குறியீட்டுச் சொல் இப்போது குறிப்பிடப்படுகிறது.

மேலும் ஒளியானது மிக நுண்ணிய துகள்களால் ஆனது என்று அவர் கூறி ஒளித்துகள் கொள்கையை வெளியிட்டார். ஒளிவிளக்கு தொலைநோக்கிகள் மூலம் பார்வையை பாதிக்கும் நிறங்களை விளக்கிக் காட்டினார். நியூட்டனின் ஒளிக்கொள்கை பல ஒளி நிகழ்ச்சிகளை விளக்கியது. ஒளி விலகல் என்றால் என்ன என்பதை நிரூபித்துக் காட்டினார்.

1668 இல் முதன் முதலில் பிரதிபலிக்கும் தொலைநோக்கியை வடிவமைத்து தயாரித்தார். பட்டகத்துடன் ஒரு குவி வில்லையையும் சேர்த்து பிம்பங்களை குவியச் செய்தார். அதில் வட்ட வளையங்களாகத் தெரியும் நிறங்களை அளவிட்டார். இந்த வளையங்கள் நியூட்டன் வளையங்கள் எனப்பட்டன. ஒரே ஒரு ஒளியை செலுத்தி பார்க்கும்போது இவ்வளையங்கள் மங்கிய நிறமாகவும் இருண்ட நிறமாகவும் மாறி மாறி தெரிந்தன. இதிலிருந்து வெண்ணிற ஒளியில் பல வர்ணங்கள் தோன்றுவது மற்ற நிறங்கள் ஒன்றன்பின் ஒன்றாக தோன்றி மறைவதால்தான் என்று விளக்கிக் காட்டினார். ஆனால் ஒளி என்பது அலைகளாய் ஆனதல்ல. சிறு சிறு துகள்களால் ஆனது என்ற தவறான கருத்தினைக் கொண்டிருந்தார்.

**பொருண்மை**

ஒரு பொருளின் பொருண்மை என்பது என்ன என்பதை விளக்கினார். பின் பொருண்மைக்கும் எடைக்கும் உள்ள சம்பந்தத்தையும் விளக்கினார். ஒரு பொருளின் அளவு என்பது அதன் அடர்த்தி மற்றும் அதன் பருமன் ஆகியவற்றின் பெருக்குத்தொகையாகும்.

**நியூட்டனின் இயக்க விதிகள்**

எந்திரவியல் துறையில்தான் பெரும்பாலான முக்கிய கண்டுபிடிப்புகளை நியூட்டன் கண்டறிந்தார்.பருப்பொருள்கள் எவ்வாறு

இயங்குகின்றன என்பதை விளக்கும் அறிவியல் எந்திரவியல் ஆகும். ஒரு பொருளில் அடங்கியுள்ள பொருள் தொகுதியை பொருண்மை என்றும் அப்பொருளின் கனத்தை எடை என்றும் கூறுகிறோம். இவை தவிர விசை போன்ற கருத்துக்களுக்கு தெளிவான விளக்கம் அளித்தவர் நியூட்டன் ஆவார். அமைதி நிலையிலோ அல்லது ஒரு நேர் கோட்டில் சீரான இயக்கத்தில் செல்லும் இயற்கை நிலையில் உள்ள ஒரு பொருளின் மீது செயல்பட்டு அந்நிலையை மாற்றுகின்ற விசை செயல்விசை எனப்படுகிறது. இது தவிர மூன்று இயக்க விதிகளை தொகுத்துக் கூறினார்.

**முதல் இயக்க விதி**

அமைதியான நிலையிலோ அல்லது ஒரே நேர் கோட்டில் சீரான இயக்கத்தில் செல்லும் இயக்க நிலையிலோ உள்ள ஒரு பொருள் பிற பொருட்களின் செயலால் அன்றி எந்தவித மாற்றமும் பெறாது. அதாவது ஒரு பொருள் சலனமற்ற நிலையில் இருந்தால் அது இறுதி வரை அதே நிலையில்தான் இருக்கும். ஏதாவது ஒரு சக்தி நகர செய்தாலன்றி அது நகராது. அதே போல ஓடிக் கொண்டிருக்கும் ஒரு பொருள் ஏதாவது ஒரு சக்தி அதை நிற்கச் செய்தாலன்றிஅது நிற்காது.

**இரண்டாம் இயக்க விதி**

ஒரு பொருளின் முடுக்கமானது அந்தப் பொருளின் மீதான நிகர விசையினை அந்த பொருளின் பொருண்மையினால் வகுப்பதால் கிடைக்கும் ஈவுக்கு சமம் என்பதுதான் நியூட்டனின் இரண்டாவது விதி.

**மூன்றாவது இயக்க விதி**

ஒவ்வொரு வினைக்கும் அதாவது ஒவ்வொரு இயற்பியல் விசைக்கும் சமமான எதிர் எதிர்வினை உண்டு என்பது மூன்றாவது விதியாகும்.

இயக்கத்தைத் தக்கவைக்க சக்தி தேவை என்ற அரிஸ்டாட்டிலின் நம்பிக்கையை முதல் இரண்டு சட்டங்கள் எதிர்க்கின்றன. நியூட்டனின் இயற்பியல் இயற்கையில் உலகளாவியது. உதாரணமாக, இரண்டாவது இயக்க விதி கோள்களுக்கும், விழும் கல்லுக்கும் பொருந்தும். சக்தியின் ளுஐ அலகு "நியூட்டன்" என்று அழைக்கப்படுகிறது. அறிவியல்

துறையில் நியூட்டனின் பங்களிப்பை கௌரவிக்கும் வகையில் இந்த அலகுக்கு “நியூட்டன்“ என்று பெயரிடப்பட்டது.



**புவியீர்ப்பு விசை கொள்கை**

கிபி 1666 ஆம் ஆண்டு டிசம்பர் 25 ஆம் நாள் ஒரு ஆப்பிள் மரத்தின் அடியில் அமர்ந்திருந்த ஐஸக் நியூட்டனின் மீது ஆப்பிள் பழம் ஒன்று விழுந்தது. இது எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் நடைபெறும் ஒரு நிகழ்வு தான் என்றாலும் எதையும் ஏன் எதற்கு என்று துருவி ஆராயும் அவரது அறிவியல் மூளையில் அது பல வினாக்களை எழுப்பியது. இந்த ஆப்பிள் பழம் ஏன் கீழே பூமியில் விழ வேண்டும், ஏன் அப்படியே வானத்தில் உயரமாக போய்க் கொண்டிருக்க கூடாது என்று ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அதன் விளைவே புவியீர்ப்பு விசை கோட்பாடு தோன்ற காரணமாகும். அண்டவெளியில் அனைத்துப் பொருட்களும் கிரகங்கள் சூரியன் விண்மீன்கள் உட்பட பிற பொருட்களை தன்பால் ஈர்க்கிறது என்ற உண்மையை அவர் கண்டறிந்தார். அந்த ஈர்ப்பு விசை பொருள்களின் இடையே உள்ள தூரத்தின் இருமடங்கிற்கு தலைகீழ் விகிதத்தில் உள்ளது என்ற விதியையும் கண்டுபிடித்தார். ஈர்ப்பு விசையின் பண்புகளையும் விவரித்துக் கூறினார். கோள்கள் அந்தரத்தில் இருப்பது எப்படி என்றும் அவை குறிப்பிட்ட கோள வீதிகளில் வலம் வருவது ஏன் என்று புவியீர்ப்பு விதி கூறியது. அதன் விளைவாக சூரியனை சுற்றி கோள்களை இயங்க வைக்கும் சக்தியும் ஆப்பிள் பழத்தை தலைக்கு இழுக்கும் விசையும் ஒன்றே என்பதையும் அவர் கண்டார்.

இவர் எழுதிய "சைஉெனியை அறிவியலில் மிக முக்கியமான புத்தகமாக கருதப்படுகிறது. இந்த புத்தகம் 5 ஜூலை 1687 இல் வெளியிடப்பட்டது. இந்த புத்தகம் வெளியான பிறகு, அவர் மிகவும் பிரபலமானார். எட்மண்ட் ஹாலி என்ற ஆங்கிலேய வானியலாளர் நியூட்டனுக்கு இந்தப் புத்தகத்தை வெளியிட நிதி உதவி செய்தார். இந்த புத்தகம் பின்வரும் அத்தியாவசிய உண்மைகளைக் கொண்டுள்ளது:

- “முதல் மற்றும் கடைசி விகிதங்கள்“ மூலம் வடிவியல் பகுப்பாய்வு ஒரு கால்குலஸ் போன்ற முறை.

- காற்றில் ஒலியின் வேகத்தின் முதல் பகுப்பாய்வு நிர்ணயம் (பாயில் விதியின் அடிப்படையில்).
- பூமியின் கோள உருவத்தின் நீள்வட்டம்.
- சந்திரனின் இயக்கத்தில் உள்ள முறைகேடுகள் பற்றிய ஈர்ப்பு ஆய்வு.
- வால்மீன்களின் சுற்றுப்பாதையை தீர்மானித்தல்.

**நுண் கணிதவியல்**

பதினேழாம் நூற்றாண்டு சிந்தனைகளில் கணிதவியல் மையமாக இருந்தது. நுண் கணிதவியல் மூலம் இயற்கையில் எழுந்த பல சிக்கலுக்கு தீர்வு கண்டார். அது ஒரு கணித கருவியாகப் பயன்பட்டது. தற்கால அறிவியலுக்கு அடிப்படையான வேறுபாட்டு நுட்ப கணிதவியலின் பயன்களையும் விளக்கிக் காட்டினார்.

**நியூட்டனின் பிற கண்டுபிடிப்புகள்**

நியூட்டனின் கண்டுபிடிப்புகள் அனைத்தும் அறிவியல் உலகிற்கு நன்மை பயப்பதாக இருந்தது. இணை விசை இணைவகப் போக்கு விதியை வகுத்துத் தந்தவர் நியூட்டனே. அனல் இயக்கவியலுக்கும் ஒலி ஆய்வியலுக்கும் அவர் பெரும் தொண்டாற்றியுள்ளார். இயங்கு விசைப் பாதுகாப்பு, கோண இயங்கு விசைப் பாதுகாப்பு ஆகியவை பற்றி மிக முக்கியமான இயற்பியல் விதிகளைக் கண்டு பிடித்தவர் நியூட்டனே ஆவார். கணிதத்தில் ஈருறுப்பு தொடர் தேற்றத்தினை கண்டு பிடித்தவர் இவரே. விண்மீன்களின் தோற்றம் குறித்து முதன் முதலில் நம்பகமான விளக்கம் அளித்தவரும் இவர் தான்.

இயற்பியல், நுண் கணிதவியல், மின்னியல் ஆகிய அறிவியல் கலைகளுக்கு நியூட்டன் அளித்த கொடைகள் அடிப்படையானவை அவரது புவியீர்ப்பு கொள்கை இந்த பிரபஞ்சத்தின் அமைப்பையும், இயக்கத்தையும் நன்கு விளக்குவதாக அமைந்தது. எல்லையற்ற இந்த அறிவியல் கடலின் ஆழம் காண முடியாத சிறுவனாக தான் அவர் தம்மை கருதினார். அவர் கூறியபடி பிறர் என்னைப் பற்றி என்ன நினைக்கிறாரோ அது எனக்கு தெரியாது ஆனால் என்னைப் பொறுத்தமட்டில் நான் கடற்கரையில் விளையாடிக் கொண்டிருக்கும் ஒரு சிறுவன். பளபளப்பான கூழாங்கல்லை அல்லது அவற்றை விட அழகான கூழாங்கல்லை தேடி பொறுக்கிக் கொண்டு இருக்கிறேன். ஆனால்

இன்னும் கண்டுபிடிக்க முடியாத உண்மை என்ற பெருங்கடல் என் முன்னால் பரந்து கிடக்கிறது என்று கூறுகிறார்.



## 5.6 வில்லியம் ஹார்வி

ஹார்வி 1578 ஆம் ஆண்டு ஏப்ரல் 1 ஆம் தேதி இங்கிலாந்தின் கென்ட், ∴போல்ஸ்டோனில் பிறந்தார். அவர் 1602 ஆம் ஆண்டு இத்தாலியின் படுவா பல்கலைக்கழகத்தில் மருத்துவப் பட்டம் பெற்றார். இங்கிலாந்து திரும்பிய பிறகு, அவர் செயின்ட் பீட்டர்ஸ்பர்க்கின் மருத்துவக் கல்லூரியில் பணிபுரிந்தார். 1618இல், ஹார்வி ஜேம்ஸ் ஐ க்கு மருத்துவராக நியமிக்கப்பட்டார், மேலும் அவர் அரச குடும்பத்துடன் நெருங்கிய தொழில்முறை உறவில் இருந்தார். அவர் 79 வயதில் 1657 ஜூன் 3 அன்று இறந்தார். 1651 இல் வெளியிடப்பட்ட 'டி ஜெனரேஷன் அனிமலியம்' என்ற தலைப்பில் இளம் விலங்குகளின் வளர்ச்சி மற்றும் வளர்ச்சி பற்றிய புத்தகம் அவரது கடைசி பங்களிப்பாகும்.

ஹார்வி தனது ஆராய்ச்சியின் பெரும்பகுதியை மனித உடலில் இரத்த ஓட்டத்தின் இயக்கவியல் மீது கவனம் செலுத்தினார். உடல் முழுவதும் இரத்தத்தை நகர்த்துவதற்கு நுரையீரல்தான் காரணம் என்று அக்கால மருத்துவர்கள் கருதினர். ஹார்வியின் புகழ்பெற்ற, விலங்குகளின் இதயம் மற்றும் இரத்தத்தின் இயக்கம் பற்றிய உடற்கூற்று ஆய்வு என்ற நூல் 1628 ஆம் ஆண்டு ஹார்விக்கு 50 வயதாக இருந்தபோது பிராங்பேர்ட்டில் லத்தீன் மொழியில் வெளியிடப்பட்டது. முதல் ஆங்கில மொழிபெயர்ப்பு இரண்டு தசாப்தங்களுக்குப் பிறகு தோன்றவில்லை. இது உடலியல் வரலாற்றில் முக்கியமான நூலாக கருதப்படுகிறது. உண்மையில் இது நவீன உடலியல் அறிவியலுக்கு முதற்படியாக அமைந்தது எனலாம். அறிவியல் துறையில் பல பண்டைகால தடைகளை விலக்கி அறிவியல் முன்னேறுவதற்கு பயன்பட்ட முக்கியமான நூலாக இது விளங்கியது. இந்த நூல் வெளிவந்த பிறகு உடல் உறுப்பு கூறுகளில் செயல்களையும் பற்றிய அறிவு தங்குதடையின்றி ஒழுங்காகவும் தொடர்ந்து முன்னேறி வந்தது.

**இரத்த சுற்றோட்ட கோட்பாடு**

வில்லியம் ஹார்வியின் நூல் வெளிவருவதற்கு முன்பு இதயத்தை பற்றியும் இரத்த ஓட்டத்தை பற்றியும் தவறான கருத்துக்களே நிலவி வந்தன. ரத்தத்தை உற்பத்தி செய்வது ஈரல்தான். உணவு இதயத்தில் ரத்தம் ஆக்கப்படுகிறது இதயம் ரத்தத்தை சூடாக்குகிறது இதயத்திலிருந்து இரத்தத்தை கொண்டு செல்லும் தமனிகளில் காற்று நிரம்பி உள்ளது உயிர் சுரப்பு நீர்களை இதயம் உற்பத்தி செய்கிறது உடலில் இரண்டு வகையான ரத்தங்கள் உள்ளன் தமனி என்ற பெரிய குழாய் மூலமும் சிரை என்ற சிறிய குழாய் மூலம் ரத்தம் பாய்கிறது இரண்டிலுமே இரத்தம் சில சமயம் இதயத்தை நோக்கியும் சில சமயம் இதயத்திலிருந்து வெளியே பாய்கிறது என்று பல்வேறு விதமான கருத்துக்கள் அப்போது நிலவி வந்தன. ஆனால் தனது ஆராய்ச்சியின் மூலம் அவர் மேற்கண்ட கருத்துக்களை எல்லாம் புறந்தள்ளினார். இந்த பரிசோதனைகளின் மூலம் ரத்தம் சுற்றோட்டமாக நமது உடலில் பாய்கிறது என்ற கொள்கையை வில்லியம் ஹார்வி வகுத்தார்.

ஒவ்வொருவரின் இதயமும் அவரவர் கையை மூடினால் இருக்கும் அளவுடன் அமைந்துள்ளது. இது ஒரு காற்று வாங்கி போல செயல்படுகிறது. இதயம் ஒவ்வொரு தடவையும் துடிக்கும்போது இதயத்திலிருந்து வெளியே பாயும் இரத்தத்தின் அளவு சுமார் 2 அவுன்ஸ் என்று வில்லியம் ஹார்வி மதிப்பிட்டார். ஒரு நிமிடத்திற்கு 70 முதல் 90 வரை இதயம் துடிக்கிறது. இப்படி ஒரு மணி நேரம் இதயம் துடிக்கும் போது 62 கேலன் இரத்தம் இதயத்தால் வெளியிடப்படுகிறது. எனவே ஒரே அளவு ரத்தம் இதயத்தின் வழியாக இடைவிடாது சுற்றி வருகிறது. ஒரு சராசரி மனிதனின் உடம்பில் 4 முதல் 5 லிட்டர் ரத்தம் உள்ளது இந்த ரத்தம் சுற்றோட்டமாக உடம்பில் சுழன்று வருகிறது என்ற உண்மையை ஹார்வி கண்டுபிடித்தார்.

ஹார்வி, உயிருள்ள விலங்குகளின் இதயத்தின் இயக்கத்தைக் கவனித்த அவர், சிஸ்டோல் என்பது இதயத்தின் இயக்கத்தின் செயலில் உள்ள கட்டமாக இருப்பதைக் காண முடிந்தது, அதன் தசைச் சுருக்கத்தால் இரத்தத்தை வெளியேற்றுகிறது. எந்த நேரத்திலும் இதயத்தில் இருந்து வெளியேறும் இரத்தத்தின் அளவு திசுக்களால் உறிஞ்சப்பட முடியாத அளவுக்கு அதிகமாக இருப்பதை உணர்ந்த அவர், இதயத்தின் திசையில் மட்டுமே இரத்தம் உடலைச் சுற்றி சுழன்று

இதயத்திற்குத் திரும்பியது என்பதை நிரூபிக்கவும் நரம்புகளில் உள்ள வால்வுகள் இரத்தத்தை ஓட்ட அனுமதிக்கின்றன என்பதைக் காட்ட முடிந்தது. பதுவாவில் உள்ள அவரது ஆசிரியரான ∴பேப்ரிசியஸ், நரம்புகளில் உள்ள வால்வுகளைக் கண்டுபிடித்தார்.

இதயம் என்பது ஒரு உட்குழியுள்ள ஒரு தசையாகும் .அந்தத் தசை இயங்கும்போது அதன் உட்புறம் அளவில் சிறியதாகிறது. எனவே உட்புறம் உள்ள ரத்தத்தை பிதுக்கி வெளியே தள்ளுகிறது. அப்போது இதயத்தின் நிறம் சிறிது வெளிறி காணப்படுகிறது .அந்த தசை தளர்ச்சியுறும்போது ரத்தம் அதன் உட்புறத்தில் உள்ள ஒரு பெரிய சதையின் உள்ளே பாய்கிறது. ஆகவே இதயம் ஒரு பம்ப் போன்று வேலை செய்கிறது.

தமனிகள் இதயத்திலிருந்து இரத்தத்தை வெளியே எடுத்துச் செல்கின்றன. சிரைகள் ரத்தத்தை இதயத்திற்கு மீண்டும் கொண்டு வந்து சேர்க்கின்றன. ஆகவே ரத்தம் உடலை சுற்றி ஓடி வருகிறது என்று கண்டறிந்தார். சிரையும் தமனியும் ஒரு வழிப் பாதைகள் என்பதையும் கண்டார். இந்தப் பாதைகளில் ஆங்காங்கே இதழ்கள் போன்ற சில பகுதிகள் தொங்கிக் கொண்டிருக்கிறன. இவை ஒருவழி கதவுக்கான வால்வுகளை போல செயல்பட்டு வருவதை கண்டார். தமனிகளில் அமைந்திருந்த வால்வுகள் ரத்தம் இதயத்தில் இருந்து வெளியேறி செல்ல மட்டுமே வழிவிட்டன.சிரைகளில் உள்ள வால்வுகள் தத்தம் இதயத்தை நோக்கி செல்ல மட்டுமே வழிவிட்டன. இதை பல பரிசோதனைகள் மூலம் நடத்தி நிரூபித்துக் காட்டினார்.

வில்லியம் ஹார்வி தன்னுடைய ஆராய்ச்சி முடிவுகளை புத்தகமாக வெளியிட்ட பிறகும் கூட அதனை ஏற்றுக்கொள்ள பல மருத்துவர்கள் மறுத்தார்கள். மனித உடலில் ரத்த நாளங்களை கொண்ட ஓர் அடைப்புள்ள ரத்த ஓட்ட மண்டலத்தின் வழியாக ரத்தம் இடைவிடாமல் ஓடிக் கொண்டிருக்கிறது என்பதையும் ரத்தம் பாய்வதற்கான விசையை இதயம் அளிக்கிறது என்பதை ஏற்றுக்கொள்ள மறுத்தார்கள். ஆனால் மனித உடற்கூறு இயலில் ஹார்வி கண்டறிந்த உண்மைகள் ஒரு புரட்சியை ஏற்படுத்தின.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. லண்டனில் ராயல் சொசைட்டி எந்த ஆண்டு நிறுவப்பட்டது?

2. கலிலியோவின் குறிப்பிடத்தக்க படைப்புகளைக் குறிப்பிடவும்.
3. மிகப் பழமையான அச்சிடப்பட்ட உரையின் ஆதாரம் எது?
4. நியூட்டனின் மூன்று இயக்க விதிகளைக் கூறவும்.
5. வில்லியம் ஹார்வி எப்போது, எங்கு பிறந்தார்?

## 5.7 உங்கள் முன்னேற்றக் கேள்விகளைச் சரிபார்க்க பதில்கள்

1. ராயல் சொசைட்டி லண்டனில் 1660 ஆம் ஆண்டு நிறுவப்பட்டது.
2. கலிலியோவின் குறிப்பிடத்தக்க படைப்புகள் பின்வருமாறு:
   - மிதக்கும் உடல்கள் பற்றிய சொற்பொழிவு (1612)
   - கிராண்ட் டச்சஸ் கிறிஸ்டினாவுக்கு எழுதிய கடிதம் (1615 இல் எழுதப்பட்டு 1636 இல்) வெளியிடப்பட்டது
   - அலைகள் பற்றிய சொற்பொழிவு (1616)
   - தி அஸ்ஸேயர் - இல் சாகியோடோர் (1623)
   - இரண்டு தலைமை உலக அமைப்புகள் பற்றிய உரையாடல் (1632)
   - இரண்டு புதியது தொடர்பான சொற்பொழிவுகள் மற்றும் கணித விளக்கங்கள்
   - அறிவியல் (1638)

3. மிகப் பழமையான அச்சிடப்பட்ட உரை சீனாவிலிருந்து வந்தது. வைரம் சூத்ரா, என்று அழைக்கப்படுகிறது. இது 868 ஊறு இல் வெளியிடப்பட்ட ஒரு பௌத்த நூல் ஆகும்.

4. நியூட்டனின் மூன்று இயக்க விதிகள் பின்வருமாறு:

(i) முதல் விதி: உடலின் வேகம் உடல் இருக்கும் வரை மாறாமல் இருக்கும் வெளிப்புற சக்தியால் செயல்பட்டது.

(ii) இரண்டாவது விதி: ஒரு பொருளின் மீது இயங்கும் விசை அப்பொருளின் பொருண்மை திசை வேகம் ஆகியவற்றின் பெருக்கல் தொகைக்கு நேர் விகிதத்தில் இருக்கும்.

(iii) மூன்றாவது விதி: இரு பொருட்களின் செயல்கள் ஒன்றின் மீது மற்றொன்று ஒன்றாகும் போது அளவில் சமமாக இருப்பதோடு எதிர் திசைகளில் இயங்குவன ஆகும்.

5. ஹார்வி 1578 ஆம் ஆண்டு ஏப்ரல் 1 ஆம் தேதி இங்கிலாந்தின் கென்ட், ∴போக்ஸ்டோனில் பிறந்தார்.

## 5.8 சுருக்கம்

- பதினேழாம் நூற்றாண்டில் இத்தாலி நாட்டில் மிகச்சிறந்த அறிவியல் அறிஞராக விளங்கியவர் கலிலியோ கலிலி என்பவர் ஆவார்.
- விண்ணியல், இயற்பியல், கணிதம் ஆகிய துறைகளில் வல்லுனரான அவர் அறிவியல் கோட்பாடுகள் பரிசோதனை மூலம் கணிதவியல் முறையில் நிரூபிக்கப்பட வேண்டும் என்று அறிவித்தார்.
- அதிக திறன் வாய்ந்த ஒரு டெலஸ்கோப்பை அவர் தயாரித்தார். 30 மடங்கு உருப்பெருக்கிக் காட்டும் ஒரு தொலைநோக்கியை உருவாக்கினார்.
- அந்த தொலைநோக்கிதான் விண்ணியலில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடக்கி வைத்தது.
- சனிக்கிரகம் மூன்றாக பிரிக்கப்பட்டு உள்ளது என்று தெரிவித்தார். சனி கிரகத்தை சுற்றியுள்ள வளையங்கள் கண்டு வியந்த கலிலியோ பலமுறை இது பற்றி ஆராய்ச்சி செய்தார்.
- இந்த வளையங்களுக்கு சனிக்கிரகத்தின் காதுகள் என்று பெயரிட்டு அழைத்தார்.
- உராய்தல் போன்ற வேகத்தை குறைக்கும் விசைகளை அடியோடு நீக்கி விட முடியுமாயின் இயங்கும் ஒரு பொருள் இடைவிடாமல் தொடர்ந்து இயங்கிக்கொண்டே இருக்கும் என்று கலிலியோ கூறினார்.
- இதிலிருந்து உந்து விசையால் தள்ளப்பட்ட கோள்கள் தானாகவே தங்களுடைய வட்டப்பாதையில் சூரியனைச் சுற்றி வருவதாக கண்டார்.
- 1632 விண்ணியல் பற்றிய தமது கருத்துக்களை இரு பெரிய உலக அமைப்புகளைப் பற்றிய உரையாடல் என்ற நூலில் வெளியிட்டார்
- இதில் டாலமியின் கருத்துக்களையும் கோபர்நிக்கஸின் கருத்துக்களையும் அலசி ஆராய்ந்த அவர் கோபர்நிக்கசின் கருத்துக்கள்தான் உண்மையானவை என்று நிரூபித்திருக்கிறார்.
- அரிஸ்டாட்டிலின் பூமி மையக் கொள்கையை புறக்கணித்து பூமிதான் சூரியனைச் சுற்றி வருகிறது என்ற கோபர்நிகஸின் கோட்பாடுகளை கலிலியோ ஆதரித்து எழுதியது திருச்சபை அதிகாரிகளைக் கோபப்படுத்தியது.

குறிப்பு

- எனவே சமய விரோதி என்று கலிலியோவை திருச்சபை அதிகாரிகள் குற்றம் சுமத்தினர்.
- அவரது கொள்கைகளைத் திரும்பப் பெறுமாறு அவர் கட்டாயப்படுத்தப்பட்டார்.
- அறிவியல் கண்டுபிடிப்புகளுள் மிகச் சிறந்த ஒன்று அச்சு இயந்திரம் ஆகும். இதைக் கண்டறிந்தவர் ஜெர்மனை சேர்ந்த ஜோகன் கூட்டன்பர்க் ஆவார்.
- இயங்கக்கூடிய எழுத்துருவையும் அச்சு இயந்திரத்தையும் பயன்படுத்தி அச்சிடும் முறையை முதலில் கண்டுபிடித்தார்.
- கூட்டன்பர்குக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பே சீனாவில் அச்சுப்பாள முறை கையாளப்பட்டு வந்தது.
- கிபி 868 அச்சிடப்பட்ட அச்சுப்புத்தகம் ஒன்று சீனாவில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது
- கூட்டன்பர்க் கண்டுபிடித்த அச்சு முறையானது நான்கு முக்கிய பகுதிகளை கொண்டது.
- முதலாவது இயங்கக்கூடிய எழுத்துரு ஆகும். இந்த எழுத்துருக்கள் ஒரு குறிப்பிட்ட நடைமுறைப்படி அளிக்கப்பட்டு ஒரு நிலையில் பொருத்தப்படுகின்றன.
- இரண்டாவது அச்சியந்திரம் மூன்றாவது பொருத்தமான அச்சுமை. நான்காவது அதற்கேற்ற காகிதம் போன்ற பொருத்தமான பொருள் ஆகும்.
- நவீனகால மறுமலர்ச்சியை வேகப்படுத்தியத்தில் அச்சியந்திரத்தின் பங்கு முக்கியமானதாகும்.
- இடைக்காலத்தில் நூற்கள் தயாரிப்பது மிகக் கடினமான வேலையாக இருந்தது. மடாலயங்களில்
- ஆனால் அச்சியந்திரம் கண்டுபிடிக்கப்பட்டதால் சமுதாயத்தில் புரட்சிகரமான மாறுதல்கள் நிகழ்ந்தன.
- நூற்கள் விரைவாகத் தயாரிக்கப்பட்டன. மேலும் அவை மலிவானதாகவும், தரமானதாகவும் இருந்தன.
- எனவே சாதாரண மக்களும் வாங்கிப்படிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

- அறிவியலாளர்கள் அகாடமி எனப்பட்ட கழகங்களை ஏற்படுத்தினர். விஞ்ஞானிகள் அனைவரும் அந்த அகாடமியில் கூடி அறிவியல் வளர்ச்சிக்கு பாடுபட்டனர்.
- லண்டன் ராயல் கழகம் 1660 ஆம் ஆண்டு இங்கிலாந்தில் லண்டன் நிறுவப்பட்டது. இதன் முழுப்பெயர் இயற்கை அறிவாக்க மேம்பாட்டிற்கான லண்டன் ராயல் கழகம் என்பதாகும்.
- இந்த அமைப்பின் நோக்கம் அறிவியல் தொழில்நுட்ப ஆராய்ச்சிகளை ஊக்குவிப்பதாகவும் மேலும் பல்வேறு அறிஞர்களும் இந்த கழகத்தில் ஒன்றுகூடி அறிவியல் கருத்துக்களை விவாதிப்பதும் ஆகும்.
- மேலும் அறிஞர்களின் கண்டுபிடிப்புகள் மற்றும் ஆய்வேடுகள் புத்தகங்களாகவும் ஆராய்ச்சிக் குறிப்புகளாகவும் வெளியிடப்படுகின்றன.
- ஆங்கில அறிவியலாளர்கள் வாரம்தோறும் ஒன்று கூடி புதிய தத்துவம் அல்லது பரிசோதனை மூலம் பெறப்பட்ட அறிவாக்கம் பற்றி தங்களுக்குள் கலந்துரையாடுவது வழக்கமாயிருந்தது.
- இக்கூட்டங்களில் ராபர்ட் பாயில் என்பவர் முக்கிய பங்கு வகித்தார். இதன் முதல் தலைவராக அவர் ராபர்ட் முரே இருந்தார்.
- அறிவியல் சம்பந்தமான ஆலோசனைகளை பல அரசுகளுக்கும் அறிவியல் உலகத்திற்கும் இந்த அமைப்பு வழங்குகிறது.
- அனைத்திற்கும் மேலாக அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி பற்றி மக்களிடம் ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தி வருகிறது.
- ராயல் கழகம் அரசுக்கு அவ்வப்போது பல ஆலோசனைகளை வழங்கியது.
- சிறைகளில் காற்றோட்ட வசதி அளிக்கும் முறைகளை இந்த அறிவியல் கழகம் கண்டுபிடித்தது
- கிரீன்விச்சில் உள்ள ராயல் வானிலை கூடத்தை பராமரித்து வந்தது.
- வெள்ளி கிரக ஆராய்ச்சி மேற்கொண்டது அதற்காக கேப்டன் ஜேம்ஸ் குக் தென் பசிபிக் கடல் பயணம் மேற்கொள்ள வேண்டிய உதவிகளை செய்தது.
- பதினேழாம் நூற்றாண்டின் தலைசிறந்த அறிவியலாளர் ஐசக் நியூட்டன் ஆவார். இயற்பியல், நுண் கணிதவியல், மின்னியல் ஆகிய

அறிவியல் கலைகளுக்கு நியூட்டன் அளித்த கொடைகள் அடிப்படையானவை.

- அவரது புவியீர்ப்பு கொள்கை இந்த பிரபஞ்சத்தின் அமைப்பையும், இயக்கத்தையும் நன்கு விளக்குவதாக அமைந்தது.
- இணை விசை இணைவகப் போக்கு விதியை வகுத்துத் தந்தவர் நியூட்டனே. அனல் இயக்கவியலுக்கும் ஒலி ஆய்வியலுக்கும் அவர் பெரும் தொண்டாற்றியுள்ளார்.
- ஹார்வி தனது ஆராய்ச்சியின் பெரும்பகுதியை மனித உடலில் இரத்த ஓட்டத்தின் இயக்கவியல் மீது கவனம் செலுத்தினார்.
- ஒவ்வொருவரின் இதயமும் அவரவர் கையை மூடினால் இருக்கும் அளவுடன் அமைந்துள்ளது. இது ஒரு காற்று வாங்கி போல செயல்படுகிறது.
- இதயம் ஒவ்வொரு தடவையும் துடிக்கும்போது இதயத்திலிருந்து வெளியே பாயும் இரத்தத்தின் அளவு சுமார் 2 அவுன்ஸ் என்று வில்லியம் ஹார்வி மதிப்பிட்டார்.

## 5.9 முக்கிய வார்த்தைகள்

**படியெடுத்தல்:** இது எண்ணங்கள், பேச்சு அல்லது தரவுகளை எழுதப்பட்ட அல்லது அச்சிடப்பட்ட வடிவத்தில் வைப்பதைக் குறிக்கிறது.
**மோனோகிரா.ஃ.ப்:** இது ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் நீண்ட, விரிவான அறிவார்ந்த எழுத்து.

## 5.10 சுய மதிப்பீடு கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுகிய விடை வினாக்கள்**

1. அறிவியல் கல்விக்கூடங்களின் அடித்தளத்தில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்க மாற்றங்கள் என்ன?
2. கலிலியோ கலிலியின் பங்களிப்பு பற்றி ஒரு சிறு குறிப்பை எழுதவும்.
3. ‘மின்சாரம் மற்றும் காந்தத்தின் தந்தை’ என்று அழைக்கப்படுபவர் யார்?

**நெடு விடை வினாக்கள்**

1. 17 மற்றும் 18 ஆம் நூற்றாண்டுகளில் அறிவியல் கல்விக்கூடங்களை நிறுவுவது பற்றி விவாதிக்கவும்.

2. கூட்டன்பெர்க் கண்டுபிடித்த அச்சு இயந்திரத்தின் முக்கியத்துவத்தை ஆராய்க.

3. ஐசக் நியூட்டனின் குறிப்பிடத்தக்க பங்களிப்பை விளக்கு.

4. மனித உடற்கூறியல் சிறப்பு குறிப்புடன் வில்லியம் ஹார்வியின் பங்களிப்பை பகுப்பாய்வு செய்க.

## 5.11 மேலும் வாசிப்புகள்

1. ராஜாராம், கல்பனா. இந்தியாவில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம். இந்தியா: ஸ்பெக்ட்ரம் புக்ஸ் பிரைவேட் லிமிடெட் , 2012.

2. ஹால்டேன், ஜே. பி.எஸ். அறிவியல் மற்றும் இந்திய கலாச்சாரம். இந்தியா: நியூ ஏஜ் பப்ளிஷர்ஸ் பிரைவேட் லிமிடெட், 1965.

3. குப்புராம், ஜி. இந்தியாவில் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப வரலாறு. இந்தியா: தெற்காசியா புத்தகங்கள், 1990

4. பேரா.வி.முருகன், வரலாற்றில் அறிவியல், பாரதி புத்தகாலயம், சென்னை, 2021

5. எஸ்.வர்கீஸ் ஜெயராஜ், அறிவியல் தொழில்நுட்ப வரலாறு, பாவை பதிப்பகம், 2010

# அலகு - 6:

## 18 மற்றும் 19 ஆம் நூற்றாண்டுகளில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம் - அறிவியல் முன்னேற்றம் - சார்லஸ் டார்வின் - மைக்கேல் ∴பாரடே – ஜேம்ஸ் கிளார்க் மேக்ஸ்வெல்

6.0 அறிமுகம்

6.1 குறிக்கோள்கள்

## 6.0 அறிமுகம்

18ஆம் மற்றும் 19ஆம் நூற்றாண்டுகளில் (ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் தொழிற்புரட்சியின் காலம்) அறிவியல் மற்றும் தொழில்நுட்பத் துறையில் பல மாற்றங்களைக் கண்டது, ஜவுளித் தொழில், இரும்புத் தாது ஆகியவற்றில் தொடங்கி பிற துறைகளுக்கும் பரவியது. 19 ஆம் நூற்றாண்டின் சிறந்த அறிவியல் கண்டுபிடிப்புகள் சிலவற்றை ஐரோப்பா கண்டது. மானுடவியல், தொல்லியல், செல் உயிரியல் என பல புதிய அறிவியல் துறைகள் வந்தன.புவியியல் அறிவியல்,குறிப்பாக புதைபடிவங்கள் மற்றும் பூமியின் இயக்கம் ஆகியவற்றில் முதிர்ச்சியடைந்தது. 'விஞ்ஞானி' தொழில் என்பது ஊதியம் பெறும் நிலையாக மாறியது. ஆராய்ச்சி ஆய்வகங்கள் பல்கலைக்கழகங்களுடன் இணைக்கப்பட்டன. விஞ்ஞானிகள் பல்கலைக்கழகங்களிலும் கற்பிக்கும் தொழிலை மேற்கொண்டனர். பல்கலைக் கழகங்களும் சில சமயங்களில் அரசாங்கமும் நிதி அளித்து, அதன் மூலம் பொது மக்கள் அறிவியல் மற்றும் தொடர்புடைய துறைகளில் ஆராய்ச்சி மற்றும் பரிசோதனைகளை மேற்கொள்ள உதவியது. 1822 வாக்கில், ஜெர்மனியில் தேசிய அறிவியல் மாநாடுகள் நடத்தப்பட்டன, இது நூற்றாண்டின் நடுப்பகுதியில் சர்வதேச மாநாடுகளை அமைப்பதற்கான முதல் படியாகும்.

குறிப்பு

## 6.1 குறிக்கோள்கள்

இந்த அலகின் முடிவில் கீழ்க்கண்டவற்றைத் தெரிந்துகொள்ள முடியும்.

- 18 மற்றும் 19 ஆம் நூற்றாண்டுகளில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பத் துறையில் ஏற்பட்ட முக்கிய முன்னேற்றங்களைப் பற்றி விவாதித்தல்
- டார்வின், ∴பாரடே மற்றும் ஜேம்ஸ் மேக்ஸ்வெல் ஆகியோரின் பங்களிப்பை ஆராய்தல்

## 6.2 18 மற்றும் 19 ஆம் நூற்றாண்டுகளில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம்

ஐரோப்பா முழுவதிலும் அறிவியல் வளர்ச்சிகள் நடைபெறத் தொடங்கியதால், அது நாட்டுக்கு நாடு பெரிதும் மாறுபடுகிறது. ஜெர்மனியில், தூய அறிவியல் முக்கிய நோக்கமாக இருந்தது. ஜெர்மன் விஞ்ஞானிகள் தொடர்ந்து ஆராய்ச்சி மற்றும் பரிசோதனைகளை மேற்கொண்டனர். பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்கிலாந்தில் பொருளுற்பத்தி முறையிடும் போக்குவரத்து முறையிலும் ஏற்பட்ட பெரும் மாறுதல்கள் தொழிற்புரட்சி எனப்படுகிறது. ஓய்வு நேரங்களில் குடும்பத்தினர் உதவியுடன் பொருட்களை உற்பத்தி செய்த நிலை மாறி ஆலைகளில் முதலாளிகள் தொழிலாளர்களை வைத்து பெருமளவில் பெருமளவில் விற்பனைக்காக உற்பத்தி செய்யத் தொடங்கினர். விசை சக்திகளால் தொழிற்சாலை இயந்திரங்களை இயக்கும் முறை பயன்படுத்தப்பட்டது. 18ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்து ஆசியா, ஆப்பிரிக்கா அமெரிக்கா கண்டங்களில் குடியேற்ற நாடுகளை கொண்டிருந்ததால் அங்கிருந்து ஏராளமான மூலப்பொருட்களை கொண்டு வந்தது உற்பத்தி செய்த பொருட்களை விற்பனை செய்யும் வசதியும் இங்கிலாந்திற்கு இருந்தது. தொழில் வளர்ச்சிக்கு உறுதுணையாக புதிய கருவிகளும் அறிவியல் தொழில்நுட்பங்களும் இங்கிலாந்தில் கண்டுபிடிக்கப்பட்டன.இங்கிலாந்தில், விஞ்ஞானிகள் நடைமுறை சிக்கல்களுக்கு விடை தேடினர். தொழில்துறை புரட்சியுடன் சிறந்த இயந்திரங்கள் மற்றும் சாதனங்களின் தேவை வலுப்பெற்றது. இருந்தாலும் ஆக்ஸ்போர்டு மற்றும் கேம்பிரிட்ஜ் போன்ற பல்கலைக்கழகங்கள்

அறிவியல் துறையை வலுப்படுத்தியது, ஏற்கனவே இருந்த சில கட்டுப்பாடுகளுடன் இங்கிலாந்தின் திருச்சபை மூலம் இன்னும் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன.பெரும்பாலான சாதனங்கள் குறைந்தபட்ச உழைப்பை மையமாகக் கொண்டு உருவாக்கப்பட்டன. இந்த தேவையின் காரணமாக, அமெரிக்காவின் மிகவும் பிரபலமான விஞ்ஞானிகள் சிலர் தங்கள் கண்டுபிடிப்புகளுக்காக அறியப்பட்டனர். இன்றுவரை, அலெக்சாண்டர் கிரஹாம் பெல், தாமஸ் எடிசன், ஜார்ஜ் ஈஸ்ட்மேன் மற்றும் ஜார்ஜ் வெஸ்டிங்ஹவுஸ் இன்னும் அங்கீகரிக்கப்பட்ட பெயர்கள் நீடித்து நிலைத்துள்ளன.முன்னேற்றங்கள் நடைபெற்ற பல்வேறு துறைகள் பின்வருமாறு விவாதிக்கப்படுகின்றன:

**1. ஜவுளி தொழில்**

பிரிட்டிஷ் ஜவுளித் தொழில் தனிப்பட்ட கைவினைஞர்களால் பதப்படுத்தப்பட்ட கம்பளியை அடிப்படையாகக் கொண்டது. இந்த கைவினைஞர்கள் தங்கள் வீடுகளின் கொல்லைப்புறத்தில் நெசவு மற்றும் நூற்பு வேலைகளில் ஈடுபட்டுள்ளனர். இந்த செயல்முறை வேகம் பெற்றதால், படிப்படியாக இது குடிசைத் தொழில் என்று அழைக்கப்பட்டது. குடிசைத் தொழில் வணிகர்களுக்கு லாபகரமானதாக நிரூபிக்கப்பட்டது.

உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களை சந்தையில் நல்ல விலைக்கு விற்க முடிந்தது. இங்கிலாந்து உலகம் முழுவதும் உயர்தர பொருட்களை ஏற்றுமதி செய்து முடித்தது. குடிசைத் தொழிலின் வெற்றி இங்கிலாந்தின் பொருளாதாரத்தை உயர்த்தியது மற்றும் பல ஆங்கில மக்களின் வாழ்க்கையை மாற்றியது, கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறம். பருத்தி மற்றும் ஆளி இரண்டு முக்கிய கூறுகள் துணி சுற்ற பயன்படுத்தப்படும்.

1730 களில், லூயிஸ் பால், ஜான் வியாட் என்ற தச்சருடன் சேர்ந்து பர்மிங்காம், ஒரு ஸ்பின்னிங் இயந்திரத்தை வடிவமைத்தது, இது ரோலர் ஸ்பின்னிங் என்று அறியப்பட்டது. ஃப்ளையர் மற்றும் பாபின் அமைப்பை வடிவமைப்பதில் அவர்கள் முக்கிய பங்கு வகித்தனர், இது கம்பளியை இன்னும் தடிமனாக வரைவதற்கு உதவியது. அடுத்தடுத்த ஆண்டுகளில் இன்னும் பல கண்டுபிடிப்புகள் காணப்பட்டன, அவை நூற்பு திறனை அதிகரித்தன, இதனால் நூல் விநியோகத்தை அதிகரித்தது. ஒரு

2. சிக்மண்ட் பிராய்ட் வகுத்த ‘டாக் தெரபி’யின் அடிப்படை நோக்கம், நோயாளியை மயக்க மனதைத் தட்டவும், அதில் அடக்கப்பட்ட ஆற்றல் மற்றும் உணர்ச்சிகளைத் தடையின்றி வெளியிடவும் ஊக்குவிப்பதாகும்.

3. தொழிற்புரட்சியின் இறுதிக் கட்டத்தில் ஜவுளித் தொழிலில் ஏற்பட்ட இரண்டு குறிப்பிடத்தக்க முன்னேற்றங்கள் பின்வருமாறு:

(i) 1764 ஆம் ஆண்டில், ஜேம்ஸ் ஹார்க்ரீவ்ஸ் ஸ்பின்னிங் ஜென்னியைக் கண்டுபிடித்தார், இது ஒரே நேரத்தில் பல சுழல் நூல்களைக் கொண்ட இயந்திரத்தை சுழற்ற அனுமதித்தது.

(ii) ரிச்சர்ட் ஆர்க்ரைட் 1769 ஆம் ஆண்டில் நீர் சட்டகத்தை உருவாக்கினார். இந்த இயந்திரம் ஒரே நேரத்தில் நூறு சுழல்களுக்கு மேல் நூலை சுழற்ற அனுமதித்தது, ஆனால் மிகவும் பெரியது மற்றும் மகத்தான ஆற்றல் தேவைப்பட்டது.

4. தொழில்துறை புரட்சியின் போது மேம்படுத்தப்பட்ட மூன்று முக்கிய போக்குவரத்து வகைகள் நீர்வழிகள், சாலைகள் மற்றும் இரயில் பாதைகள்.

5. ஜேம்ஸ் வாட் 25 ஆகஸ்ட் 1819 அன்று பர்மிங்காமில் இறந்தார்.

6. ஜேம்ஸ் வாட் நவீன நீராவி இயந்திரத்தின் தந்தை என்று அழைக்கப்படுகிறார்.

## 8.8 சுருக்கம்

- சிக்மண்ட் பிராய்ட் 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் உடலியல் நிபுணர், மருத்துவ மருத்துவர் மற்றும் செல்வாக்கு மிக்க சிந்தனையாளர் ஆவார்.
- ஆஸ்திரியப் பேரரசின் மொராவியன் நகரமான ∴ப்ரீபெர்க்கில் யூதப் பெற்றோருக்கு 1856 ஆம் ஆண்டு மே 6 ஆம் தேதி பிறந்தார்
- 1882 இல் வியன்னா பொது மருத்துவமனையில் ஜோசப் ப்ருருடன் பணிபுரிந்தார். மூன்று ஆண்டுகள் மருத்துவமனையின் பல்வேறு பிரிவுகளில் பணியாற்றினார்.

- 1885 இல் தனது வாழ்விடத்தை முடித்த பிறகு, அவர் நரம்பியல் மருத்துவராக நியமிக்கப்பட்டார்
- சிக்மெண்ட் பிராய்டு வியன்னா பல்கலைக்கழகத்தில் மருத்துவ பட்டம் பெற்ற இவர் உடல் இயங்கு இயலில் ஆராய்ச்சிகள் நடத்தினார்.
- பின் நரம்பியல் மருத்துவத்தில் தனியாக தொழில் ஆற்றி வந்த இவர் ஒரு உளவியல் மருத்துவமனையில் பணியில் சேர்ந்தார்.
- உளவியல் கோட்பாட்டு வளர்ச்சிக்கு பிராய்டு ஆற்றிய தொண்டு மிகச்சிறந்ததாகும். உளவியல் பற்றிய தனது கருத்துக்களை படிப்படியாக வகுத்து வந்தார் பிராய்டு.
- 1895இல் மனநோய் பற்றிய ஆராய்ச்சி என்ற தனது முதலாவது நூலை வெளியிட்டார்
- மன நோயை குணப்படுத்துவதற்கு உரிய ஒரு முறையான உளநிலை பகுப்பாய்வு முறையை கண்டுபிடித்தார்.
- மனித ஆளுமையின் கட்டமைப்பு பற்றிய கோட்பாடு ஒன்றையும் இவர் வகுத்தமைத்தார்.
- துணிகளின் உற்பத்தி, குறிப்பாக பருத்தி, 1750 மற்றும் 1850 க்கு இடையில் பிரிட்டனின் பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையாக இருந்தது.
- பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பிய நாடுகளிலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் தொழில்புரட்சி முழுமை பெற்றது.
- ஜவுளித் தொழில் துணி மற்றும் ஆடைகளின் வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டது.
- தொழில்துறை வளர்ச்சியானது போக்குவரத்து மேம்பாட்டுடன் நெருக்கமாக தொடர்புடையது. தொழில்மயமாக்கல் போக்குவரத்து மற்றும் பயணத்தின் தேவையை அதிகரித்ததால், சுங்கச்சாவடிகள் மற்றும் கால்வாய்கள் கட்டுமானம் லாபகரமான வணிகமாக மாறியது.
- 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், பிரிட்டிஷ் பொறியியலாளர்கள் சாலை மற்றும் கால்வாய் கட்டும் நுட்பங்கள் இரண்டிலும் புதுமைகளை உருவாக்கத் தொடங்கினர்.
- போக்குவரத்தில் சிறந்த கண்டுபிடிப்பு நீராவி சக்தியின் பயன்பாடு ஆகும், இது மூன்று வடிவங்களில் நிகழ்ந்தது

- சாலைப் போக்குவரத்தில் பயன்படுத்தப்படும் மிகச்சிறந்த வாகனம் மோட்டார் கார் ஆகும்.
- தற்போது இந்த கார்கள் பெட்ரோல் அல்லது டீசலை எரிபொருளாக கொண்டு இயங்குகின்றன. ஆனால் ஆரம்பத்தில் இவை நீராவி என்ஜின் மூலம் தான் இயங்கின என்கிறார்.
- 1860 இல் பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ஜீன் எட்வின் விலனார் என்பவர் ஆவி மூலம் இயங்கும் காரை கண்டுபிடித்தார்
- இன்று விண்ணில் விரைந்தோடும் விமானங்களின் முன்னோடியாக விளங்கியவர் வில்பர் ரைட் மற்றும் ஆர்வில் ரைட் என்ற இரு சகோதரர்கள் ஆவர்.
- ஜேம்ஸ் வாட் ஒரு கண்டுபிடிப்பாளர், இயந்திர பொறியாளர் மற்றும் வேதியியலாளர் ஆவார், அவர் ஜனவரி 19, 1736 இல் ஸ்காட்லாந்தில் உள்ள கிரீனாக்கில் பிறந்தார்.
- நியூ கோமானின் எந்திரத்தில் காணப்பட்ட குறைகளைப் போக்குவதற்காக அவர் முதலில் நீராவியின் தன்மைகளை ஆராய தொடங்கினார். நீராவியின் அடர்த்திக்கும் அழுத்தத்திற்கும் அதன் வெப்ப நிலைக்கும் உள்ள தொடர்பை ஆராய்ந்தார்.
- ஜேம்ஸ் வாட்டின் நீராவி எஞ்சின் சிறந்த முறையில் அமைந்து விட்டதால் 1790க்குள் அதன் உபயோகம் பன்மடங்காகப் பெருகியது.
- அதன் துணையால் ஏராளமான அளவில் விசை உற்பத்தி செய்யப்பட்டது
- ஜேம்ஸ் வாட் நவீன நீராவி இயந்திரத்தின் தந்தை என்று அழைக்கப்படுகிறார். 1800 வாக்கில், சுமார் முந்நூறு நீராவி இயந்திரங்கள் ஆலைகள், தொழிற்சாலைகள், மதுக்கடைகள் மற்றும் பிற உற்பத்தி நடவடிக்கைகளில் வேலை செய்தன.

## 8.9 முக்கிய வார்த்தைகள்

**குடிசைத் தொழில்:** மக்கள் தங்கள் சொந்த கருவிகள் மற்றும் உபகரணங்களைப் பயன்படுத்தி பொருட்களை உற்பத்தி செய்வது பொதுவாக வீடுகளில் செய்யப்படும் ஒரு தொழில் ஆகும்.

**பருத்தி ஜின்:** பருத்தி இழையிலிருந்து விதைகளைப் பிரிக்கும் சாதனம் இது.

**ஈரோஜெனஸ் மண்டலங்கள்:** இவை தொடும்போது அல்லது தூண்டப்படும்போது உடலுறவு உணர்வுகளைத் தூண்டும் உடலின் பாகங்கள்.

**ஸ்பின்னிங் ஜென்னி:** இது ஆற்றலை உற்பத்தி செய்ய நீராவியைப் பயன்படுத்தும் ஒரு இயந்திரம்.

**நீராவி இயந்திரம்:** இது ஆற்றலை உற்பத்தி செய்ய நீராவியைப் பயன்படுத்தும் இயந்திரம்.

## 8.10 சுய மதிப்பீடு கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுகிய விடை வினாக்கள்**

1. சிக்மண்ட் பிராய்ட் யார்?
2. தொழிற்புரட்சி எவ்வாறு போக்குவரத்தில் மாற்றங்களை ஏற்படுத்தியது?
3. தொழில் புரட்சிக்கு ஜேம்ஸ் வாட் எவ்வாறு பங்களித்தார்?

**நீண்ட விடை வினாக்கள்**

1. சிக்மண்ட் பிராய்டின் குறிப்பிடத்தக்க கோட்பாடுகளைப் பற்றி விவாதிக்கவும்.
2. பிராய்ட் வழங்கிய மனோபாலுணர்ச்சி நிலைகளின் வளர்ச்சியின் கருத்தை விளக்குங்கள்.
3. தொழில் புரட்சியின் போது ஜவுளித் துறையில் ஏற்பட்ட முன்னேற்றத்தை விவரிக்கவும்.
4. ஜேம்ஸ் வாட்டின் நீராவி இயந்திரத்தின் வளர்ச்சிக்கு வழிவகுத்த நிலைகளை விவரிக்கவும்.

## 8.11 மேலும் வாசிப்புகள்

1. ராஜாராம், கல்பனா. இந்தியாவில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம். இந்தியா: ஸ்பெக்ட்ரம் புக்ஸ் பிரைவேட் லிமிடெட் , 2012.

2. ஹால்டேன், ஜே. பி.எஸ். அறிவியல் மற்றும் இந்திய கலாச்சாரம். இந்தியா: நியூ ஏஜ் பப்ளிஷர்ஸ் பிரைவேட் லிமிடெட், 1965.

3. குப்புராம், ஜி. இந்தியாவில் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப வரலாறு. இந்தியா: தெற்காசியா புத்தகங்கள், 1990.

4. பேரா.வி.முருகன், வரலாற்றில் அறிவியல், பாரதி புத்தகாலயம், சென்னை, 2021

5. எஸ்.வர்கீஸ் ஜெயராஜ், அறிவியல் தொழில்நுட்ப வரலாறு, பாவை பதிப்பகம், 2010

# அலகு 9

## நவீன இரசாயனத் தொழில் – டைனமைட் – தொலைபேசி – தந்திகள் - தாமஸ் ஆல்வா எடிசன் - மின் விளக்கு



## 9.0 அறிமுகம்

வரலாறு முழுவதும் இரசாயனங்கள் தயாரிக்கப்பட்டு பயன்படுத்தப்பட்டாலும் கனரக இரசாயனத் தொழிலின் ஆரம்பம் பொதுவாக தொழில் புரட்சியின் தொடக்கத்துடன் ஒத்துப்போனது.

பிரிட்டனில் ஜவுளித் தொழிலின் வளர்ச்சி இரசாயனத் தொழிலில் ஆர்வத்தை உயர்த்தியது. 19 ஆம் நூற்றாண்டில், தகவல் தொடர்பு தொழில்நுட்பத் துறையில் சிறந்த கண்டுபிடிப்புகளான தந்தி மற்றும் தொலைபேசி இரண்டும் இருந்தன. உடனடி தகவல்தொடர்பு பரவலால் உலகம் நெருங்கியது. முதலாவது 1837 இல் பிரிட்டிஷ் கண்டுபிடிப்பாளர்களான சர் வில்லியம் குக் மற்றும் சர் சார்லஸ் வீட்ஸ்டோன் கண்டுபிடித்த மின்சார தந்தி, மற்றொன்று 1876 இல் அலெக்சாண்டர் கிரஹாம் பெல் கண்டுபிடித்த தொலைபேசி ஆகும். ஃபோனோகிராஃப், மின் விளக்கு போன்ற கண்டுபிடிப்புகள் மற்றும் அவரது பெயருக்கான பல காப்புரிமைகள் இது உண்மையாக இருக்கலாம்.

## 9.1 குறிக்கோள்கள்

இந்த அலகின் முடிவில் கீழ்க்கண்டவற்றைத் தெரிந்துகொள்ள முடியும்.

- நவீன இரசாயனத் தொழிலின் வளர்ச்சியைப் பற்றி விவாதித்தல்
- ஆல்பிரட் நோபலின் டைனமைட்டின் கண்டுபிடிப்பை விளக்குதல்
- தகவல் தொடர்பு தொழில்நுட்பத்தில் இரண்டு பெரிய கண்டுபிடிப்புகளான தந்தி மற்றும் தொலைபேசியை மதிப்பிடுதல்

## 9.2 நவீன இரசாயனத் தொழில்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வேதியல் துறையில் மிகப் பெரும் முன்னேற்றம் நிகழ்ந்தது. நவீன தொழில்நுட்பங்கள் மூலம் ஏற்பட்ட புதிய கண்டுபிடிப்புகள் மிகப்பெரிய விளைவுகளை ஏற்படுத்தின. அந்நூற்றாண்டின் இறுதி ஐந்து ஆண்டுகளில் வேதியல் முற்றிலும் புதியதொரு அறிவியலாக உருவாகியது. பல்வேறு தொழில் நுட்பத்துக்கு வேதியல் பொருட்கள் தேவைப்பட்டதால் வேதியல் ஆய்வுகள் தீவிரப் படுத்தப் பட்டன. குறிப்பாக நெசவு தொழிலுக்கு சில ரசாயன பொருட்கள் தேவைப்பட்டன. அதனால் அறிவியலின் தந்தை நெசவுத்தொழில் என்று கூறப்பட்டது. அறிவியல் ஆய்வு காரணமாக கீழ்க்கண்ட கண்டுபிடிப்புகள் நிகழ்த்தப்பட்டன. வர்ணங்களின் மூலப்பொருட்கள் மற்றும் மருந்துகள் செயற்கையாக உருவாக்கப்பட்டன.

கந்தக அமிலத்திற்கான தொடர்பு கிரியா ஊக்குவித்தல் உருவாக்கப்பட்டது. காற்றிலிருந்து நைட்ரஜன், செல்லுலோஸ் குழைவுப் பொருட்கள் மற்றும் ரேயான் உருவாக்கப்பட்டன. செயற்கை நார் இழைகள் உருவாக்கப்பட்டன. நைலான் போன்ற புதிய குழைவுப் பொருட்கள் தயாரிக்கப்பட்டன. ஐசொடாக்டிக் பாலிமர்கள் உருவாக்கப்பட்டன. பெட்ரோலியம் சுத்தமாக்கப்பட்டது. மின் வேதிய வழிமுறைகள் கண்டுபிடிக்கப்பட்டன.

நவீன இரசாயனத் தொழில் கிட்டத்தட்ட பிரிட்டிஷ் பருத்தித் தொழிலுக்கு வேகமான ப்ளீச்சிங் நுட்பங்களை உருவாக்கும் நோக்கத்துடன் தோன்றியது. 18 ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில், கந்தக அமிலம் அதிக அளவில் உற்பத்தி செய்யப்பட்ட முதல் இரசாயனமாகும். ஜான் ரோபக் ஈய அறைகளில் கந்தக அமிலத்தை பெருமளவில் உற்பத்தி செய்யும் முறையைக் கண்டுபிடித்தார். 1749 ஆம் ஆண்டில், சாமுவேல் கார்பெட்டுடன் சேர்ந்து ரோபக் 1749 ஆம் ஆண்டில் ப்ரெஸ்டன்பான்ஸில் ஒரு பெரிய அளவிலான தொழிற்சாலையை முதன்முதலில் நிறுவினார், இது கந்தக அமிலத்தின் உற்பத்திக்கு ஈய மின்தேக்கி அறைகளைப் பயன்படுத்தியது. அமிலம் நேரடியாக ப்ளீச்சிங் செயல்பாட்டில் பயன்படுத்தப்பட்டது, ஆனால் இது மிகவும் பயனுள்ள குளோரின் ப்ளீச்கள் தயாரிப்பிலும், மற்றும் ப்ளீச்சிங் பவுடர் தயாரிப்பிலும் பயன்படுத்தப்பட்டது. இந்த தயாரிப்பு பருத்தி ஜவுளித் தொழிலின் தேவைகளை வெற்றிகரமாக பூர்த்தி செய்தது. அதன் பிறகு, இரசாயனத் தொழிலின் கவனம் மற்ற தொழில்களின் தேவைகளை நோக்கி திரும்பியது.குறிப்பாக சோப்பு, கண்ணாடி மற்றும் பலவகையான உற்பத்தி செயல்முறைகளில் காரத்திற்கான அதிகரித்து வரும் தேவையை பூர்த்தி செய்யும் நோக்கில். இதன் விளைவாக லெப்லாங்க் சோடா செயல்முறை வெற்றிகரமாக நிறுவப்பட்டது, இது பிரான்சில் நிக்கோலஸ் லெப்லாங்கால் காப்புரிமை பெற்றது. 1791, சோடியம் கார்பனேட் (சோடா) வெகுஜன உற்பத்திக்காக. இது 19 ஆம் நூற்றாண்டின் இறுதி வரை பிரிட்டனில் பயன்படுத்தப்பட்ட முக்கிய கார செயல்முறையாக இருந்தது.

நெசவு தொழில் மற்றும் கண்ணாடி தொழில்களுக்கு ஏராளமான காரப்பொருட்கள் தேவைப்பட்டன. 1787இல் நிக்கோலஸ் லெப்லாங் என்பவர் சோடியம் தயாரிப்பில் ஈடுபட்டார். இத்தொழிலுக்குத் தேவையான

மூலப் பொருள் ஆகும் உப்பு, இறக்குமதி மீது பிரிட்டிஷ் அரசு கடுமையான தீர்வை விதித்திருந்ததால் தயாரிப்பு பயனுள்ளதாக இல்லை. சாதாரண உப்பை கந்தக அமிலத்தோடு கலந்து சோடியம் சல்பேட் தயாரித்து பின் அதோடு நிலக்கரி, சுண்ணாம்புக்கல் ஆகியவற்றை கலந்து சோடா தயாரிக்க வேண்டியிருந்தது .இந்த உற்பத்தியில் தொடர்புடையவை அனைத்தும் ரசாயன பொருட்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. 1813இல் பிரிட்டனில் உப்பு மீதான தீர்வை ரத்து செய்யப்பட்ட பின்னர்தான் ரசாயன தொழில்கள் வளர்ச்சி அடைந்தன. லெப்லாங் முறையை பின்பற்றி சார்லஸ் டென்னட் என்பவர் பெரியதொரு ரசாயன ஆலையை நிறுவினார். பல்வேறு தொழில் உற்பத்திகளுக்கு கந்தக அமிலம் பயன்படுவதால் ஒரு நாட்டில் எவ்வளவு கந்தக அமிலம் பயன்படுத்தப்படுகிறது என்பதை கொண்டு அந்த நாட்டின் தொழில் உற்பத்தியை கணக்கிட்டு விடலாம் என்று கூறுவர். 1737இல் ஜான் ரோபக் என்பவர் பெருமளவில் மலிவான விலையில் கந்தக அமிலம் தயாரிக்கும் முறையை கண்டுபிடித்தார். அதன் உதவியைக் கொண்டு டென்னட் சலவை சோடா உற்பத்தி செய்தார்.

## செயற்கை சாயப் பொருட்கள்

ரசாயன தொழிலுக்கு மிக முக்கிய தேவையான சாய பொருள் தயாரிப்பு 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வளர்ச்சி அடைந்தது. சாய தொழிலுக்கு ஒரு அடிப்படையை அமைத்துக் கொடுத்தவர் ஹாப்மேன் என்ற வேதியல் அறிஞர் ஆவார். இந்தியாவில் இருந்து இறக்குமதியான அவுரி என்ற தாவரப்பொருள் சாயம் தயாரிக்க பெரிதும் பயன்படுத்தப்பட்டது. இங்கிலாந்தில் ராயல் வேதியியல் கல்லூரியின் கண்காணிப்பாளராக இருந்த ஹாப்மன் என்ற ஜெர்மானியர் நிலக்கரியின் கழிவு பொருட்களிலிருந்து பல ரசாயனப் பொருட்கள் தயாரிக்கலாம் என்று கண்டறிந்தார். அவரது மாணவர் பெர்கின் என்பவர் 1856இல் இளம் கத்தரிப்பூ நிறத்தைக் கண்டுபிடித்தார். இது பட்டுத் துணிகளுக்குச் சாயமேற்ற அதற்கு பெரிதும் பயன்பட்டது. பிரான்சில் உள்ள வேதியியல் வல்லுநர் வெகுர்குயின் என்பவர் ஒளிபொருந்திய சிவப்பு சாயத்தை கண்டுபிடித்தார். பின் நாளடைவில் பல்வேறு நிறங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. காரோ என்பவர் பழுப்பு மற்றும் நீல நிற

சாயத்தையும் பச்சை நிறச் சாயத்தை பிஷர் என்பவரும் சிவப்பு சாயத்தை போல்டிகர் என்பவரும் கண்டுபிடித்தனர். சாயத்தொழில் முதன் முதலில் இங்கிலாந்தில் ஆரம்பமானது என்றாலும் பின்னர் ஜெர்மனி தான் சாய தொழிலின் மைய இடமாக விளங்கியது. சாயங்கள் வெளுக்காமல் இருக்க செயற்கை சாயங்களை நிலைக்கச் செய்யும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இதற்காக அரிகார முறை பின்பற்றப்பட்டது. இந்த முறையில் சாயம் ஏற்றப் படுவதற்கு முன்னர் நூலை டானிக் அமிலம் அல்லது உலோக உப்புக்களில் தோய்த்து எடுத்தனர். இந்த முறையில் செயற்கை சாயங்களை உருவாக்கும் வழிமுறைகளை பீட்டர்கிரைஸ் என்பவர் 1858ல் கண்டுபிடித்தார். இந்த வகையான சாயங்கள் ஆசோசாயங்கள் எனப்பட்டன.

ஆங்கிலேய உலோகவியலாளர் அலெக்சாண்டர் பார்க்ஸ் முதல் பிளாஸ்டிக்கைக் கண்டுபிடித்தார். 1856ஆம் ஆண்டில், பல்வேறு கரைப்பான்களுடன் சிகிச்சையளிக்கப்பட்ட நைட்ரோசெல்லுலோஸை அடிப்படையாகக் கொண்ட செல்லுலாய்டு பார்கசினுக்கு அவர் காப்புரிமை பெற்றார். 1885 ஆம் ஆண்டில், வில்லியம் லீவரும் அவரது சகோதரர் ஜேம்ஸும் கிளிசரின் மற்றும் தாவர எண்ணெய்களைப் பயன்படுத்தி வில்லியம் ஹக் வாட்சன் கண்டுபிடித்த செயல்முறையான நவீன இரசாயனத்தைப் பயன்படுத்தி லங்காஷயரில் தாவர எண்ணெய்களிலிருந்து சோப்பை உற்பத்தி செய்யத் தொடங்கினர்.20 ஆம் நூற்றாண்டின் ஆரம்ப ஆண்டுகளில், இரசாயன நிறுவனங்கள் பெரிய நிறுவனங்களாக ஒருங்கிணைக்கப்பட்டன் ஜெர்மனியில் ஐ.ஃ.பார்பென், பிரான்சில் ரோன்-போலென்க் மற்றும் பிரிட்டனில் இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் ஆகியவை அதில் அடங்கும்.20 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அமெரிக்காவில் டுபான்ட் ஒரு பெரிய இரசாயன நிறுவனமாக மாறியது.

**உங்கள் முன்னேற்றத்தை சோதித்தறிக**

1. கந்தக அமிலத்தை பெருமளவில் உற்பத்தி செய்யும் முறையை கண்டுபிடித்தவர் யார்?

2.விவசாயத்திற்காக செயற்கையாக தயாரிக்கப்பட்ட உரத்தை தயாரிப்பதில் முன்னோடியாக இருந்தவர் யார்?

3. முதல் செயற்கை சாயத்தை கண்டுபிடித்தவர் யார்?

## 9.3 டைனமைட்

குறிப்பு

பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை சாதாரண துப்பாக்கி மருந்துதான் வெடி மருந்தாக பயன்பட்டு வந்தது. சுரங்கங்களில் வெடிப்பு ஏற்படுத்துவதற்கும் துப்பாக்கி மருந்துதான் பயன்படுத்தப்பட்டு வந்தது. 19ஆம் நூற்றாண்டின் மத்தியப் பகுதிகளில் வெடிபஞ்சு அதாவது வெடிப்பாற்றலுள்ள நீர்மங்களில் தோய்த்த பஞ்சு ஸ்கோன்பெய்ன் என்ற ஜெர்மானியரால் கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் திடீரென எதிர்பாராத நேரத்தில் எளிதில் வெடிக்கும் தன்மை வாய்ந்ததால் அது தடைசெய்யப்பட்டது. அதேபோல் வெடிப்பாற்றல் மிகுந்த மஞ்சட் கலவை நீர்மமும் அபாயகரமானது என்று தடை செய்யப்பட்டது. சுரங்கங்களில் பாறைகளைப் பிளக்கவும் பனிக்கட்டிகளை நொறுக்கவும் குறிப்பாக ஆறுகளின் முகத்து வாரங்களில் குளிர் காலங்களில் நீர் நிலைகளில் நீர் பரவும் அபாயத்தை தடுக்கவும் வெடிகுண்டு தேவைப்பட்டது.

### ஆல்பிரட் நோபிள்

பாதுகாப்பான வெடி மருந்தை கண்டுபிடித்தவர் ஆல்பிரட் நோபல் என்பவர் ஆவார். இவர் கண்டுபிடித்த பொருளுக்கு டைனமைட் என்று பெயர். இவர் 1866 இல் நைட்ரோ கிளிசரினுடன் கிசல்கர் என்ற பொருளைச் சேர்த்து பாதுகாப்பான வெடி பொருளாக உருவாக்கினார். பின்னர் மரக்கூழ் மற்றும் சோடியம் நைட்ரேட்டுடன் சேர்த்து உருவாக்கும் முறையையும் கண்டறிந்தார். அதற்கு டைனமைட் என்று பெயரிட்டார்.

ஆல்ஃபிரட் நோபல் 7 மே 1867 இல் இங்கிலாந்திலும், 19 அக்டோபர் 1867 இல் ஸ்வீடனிலும் டைனமைட்டைக் கண்டுபிடித்ததற்காக காப்புரிமையைப் பெற்றார். இதற்குப் பிறகு, டைனமைட் பயன்பாடு கருப்பு தூள் மற்றும் நைட்ரோகிளிசரின் ஆகியவற்றிற்கு பாதுகாப்பான மாற்றாக வேகமாக பிரபலமடைந்தது. நோபல் காப்புரிமைகளை உறுதியாகக் கட்டுப்படுத்தினார் மற்றும் பல நகல் நிறுவனங்களுக்கு உரிமம் வழங்கவில்லை, அவை விரைவாக மூடப்பட்டன. இருப்பினும், சில அமெரிக்க வணிகர்கள் வெவ்வேறு உறிஞ்சிகளைப் பயன்படுத்தி காப்புரிமையைப் பெற்றார். ஆல்ஃபிரட் நோபல் முதலில் டைனமைட்டை நோபலின் பிளாஸ்டிங் பவுடராக விற்றார், ஆனால் டைனமிஸ் என்ற கிரேக்க வார்த்தையான “சக்தி“ என்பதிலிருந்து டைனமைட் என மாற்ற

குறிப்பு

முடிவு செய்தார். டைனமைட்டின் கண்டுபிடிப்பு ஆல்.ஃபிரட் நோபலின் பிரபலத்தை உலகம் முழுவதும் நிலைநிறுத்தியது மற்றும் அது பரவலாக வந்தது.

19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், ஆல்.ஃபிரட் நோபல் டைனமைட் தயாரிப்பதற்காக ஐரோப்பா முழுவதும் தொழிற்சாலைகளின் வலையமைப்பை உருவாக்கினார். அவர் தனது ஆராய்ச்சியைத் தொடர்ந்தார், 1875 ஆம் ஆண்டில், பிளாஸ்டிங் ஜெலட்டின் எனப்படும் டைனமைட்டின் மிகவும் சக்திவாய்ந்த வடிவத்தைக் கண்டுபிடித்தார். நைட்ரோகிளிசரின் கரைசலை நைட்ரோசெல்லுலோஸுடன் கலப்பதன் மூலம் கடினமானது என்பதையும் அவர் கண்டுபிடித்தார். அதிக நீர் எதிர்ப்பு மற்றும் அதிக வெடிக்கும் சக்தி கொண்ட பிளாஸ்டிக் பொருள் உருவாகிறது. 1887 ஆம் ஆண்டில், நைட்ரோசெல்லுலோஸ் மற்றும் நைட்ரோகிளிசரின் ஆகிய இரண்டு வெடிப்பொருட்களிலிருந்து தயாரிக்கப்பட்ட புகையற்ற உந்துசக்தியான பாலிஸ்டைட்டை அறிமுகப்படுத்தினார்.

இவர் ராணுவத்திற்கு பயன்படும் வெடி பொருட்களை அதிக அளவில் தனது தொழிற்சாலையில் தயாரித்தார். இந்த வெடிமருந்து போர்க்களத்தில் மனித உயிர்களை கொல்வதற்கு பயன்பட்டது. அதாவது பெருமளவில் வெடிகுண்டுகள் தயாரிக்கப்பட்டன. மக்கள் அவரை மரண வணிகர் என்று சாற்றினர். இதனால் அவருக்கு பெருமளவில் செல்வம் குவிந்தது. ஆனால் தமது அறிவியல் நுண்திறனால் கண்டுபிடிக்கப்பட்ட வெடிமருந்து மனித உயிர்களை கொல்வதற்கும் நாடு நகரங்களை அழிப்பதற்கும் பயன்படுவது கண்டு வேதனையடைந்தார். அதனால் தான் ஈட்டிய பெரும் செல்வத்தை மக்களுக்கு நலன் பயக்கும் அறிவியல் பணிகளை ஊக்குவிக்க பயன்படுத்த விரும்பினார்.அதன் விளைவாக உருவானதே நோபல் பரிசு ஆகும். தனது கண்டுபிடிப்புகள் மூலம் கிடைத்த செல்வத்தைக் கொண்டு தனது இறப்புக்குப் பிறகு நோபல் அமைப்பு ஒன்றை உருவாக்க உயில் எழுதி வைத்தார். ஆண்டுதோறும் இலக்கியம், வேதியியல், இயற்பியல், மருத்துவம் ஆகியவற்றில் அரிய கண்டுபிடிப்புகளை கண்டுபிடித்தவர்களுக்கு பரிசு வழங்கும் திட்டத்தை தொடங்கினார். 1896ல் நோபல்பவுண்டேசன் என்ற நிறுவனம் அமைக்கப்பட்டது. 1901

ஜனவரி முதல் தேதி அது தன் பணியைத் தொடங்கியது. அதன்படி ஒவ்வொரு ஆண்டும் நோபல் பரிசு வழங்கப்பட்டு வருகிறது.

1884இல் அறிவியல் அறிஞர் பால்விய்யல் என்பவர் மற்றொரு பாதுகாப்பான வெடிபொருளை உருவாக்கினார். நைட்ரோ காட்டனை ஈதர்அல்லது ஆல்கஹாலில் தோய்த்து ஜெல் என்ற வடிவில் உருவாக்கி பின்னர் காயவைத்து பாதுகாப்பான வெடிபொருளை உருவாக்கினார். டிரை நைட்ரோ டோலுனைப் பயன்படுத்தி வில்பிரன்ட் என்பவர் ஒரு வெடி பொருளை கண்டுபிடித்தார். இந்த வெடிபொருட்கள் பலவகைகளில் பயன்படுகிறது. குண்டுகள் தயாரிக்கவும், சுரங்கங்கள் தோண்டவும் பயன்படுகிறது. சுரங்கங்களில் பாறைகளைத் தகர்க்க வெடி பொருட்களை பயன்படுத்துகின்றனர். பூமிக்கடியில் எண்ணெய் வளம் பற்றி ஆய்வு செய்வதற்கும் வெடிபொருட்களை வெடிக்க செய்து பரிசோதித்து பார்க்கப்படுகிறது.

## 9.4 தொலைபேசி

பண்டைய காலத்தில் இருந்தே செய்திகள் சில சங்கேத ஒலிகள், ஒளிக்கதிர்கள், புகை மண்டலம், ஆகியவற்றின் மூலம் அனுப்பப்பட்டன. இந்தியாவில் தொடர் மணி ஓசை மூலமும் முரசு ஒலி மூலமும் செய்திகள் அனுப்பப்பட்டன. புறாக்கள் செய்தி அனுப்பும் கருவிகளாக பழக்கப்பட்டன. பண்டைய கிரேக்கர்கள் ஒளிக்கதிர்கள் மூலம் செய்தி அனுப்பினர். அமெரிக்க பூர்வீகக் குடிமக்கள் புகை எழுப்பி அதன் மூலம் சில செய்திகளை தொலைதூர மக்களுக்கு தெரியும்படி செய்தனர். ஆனால் இந்த செய்தி தொடர்பு பல இடர்பாடுகளுக்கும் குறைபாடுகளுக்கும் உட்பட்டது. இவற்றை அகற்றி அறிவியல் முறையில் தொலை தூர இடங்களுக்கு தந்தி மூலமும் தொலைபேசி மூலமும் செய்தி அனுப்பும் முறையை பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் கண்டுபிடித்தனர். தொலைவில் இருப்பவர் உடன் நேருக்கு நேர் பேசுவதற்கு உதவும் கருவி கண்டுபிடிப்பு ஆராய்ச்சி தொடங்கியது. 1861 இல் ஜெர்மன் இயற்பியல் அறிஞர் ஹெர்மன் ஹேல்ம் ஹோல்ட்ஸ் தொலைபேசியை செய்து காட்டினாலும் இன்று நடைமுறையிலிருக்கும் தொலைபேசியை கண்டுபிடித்தவர் அலெக்ஸாண்டர் கிரஹாம்பெல் ஆவார்.

டெலி.:.போன் என்ற சொல் கிரேக்க வார்த்தையான டெலி என்பதிலிருந்து பெறப்பட்டது, இது “தொலைவு“ மற்றும் தொலைபேசி என்றால் “குரல்“, ஒன்றாக “தொலைதூர குரல்“ என்று பொருள்படும். பல கண்டுபிடிப்பாளர்கள் ஒரு கம்பி வழியாக குரல் பரிமாற்றம் மற்றும் ஒருவருக்கொருவர் யோசனைகள் மற்றும் புதுமைகளை மேம்படுத்துவதற்கான சோதனை வேலைகளில் முன்னோடியாக இருந்தனர். சார்லஸ் போர்சுல், அன்டோனியோ மெயூசி, ஜோஹான் பிலிப் ரெய்ஸ், அலெக்சாண்டர் கிரஹாம் பெல் மற்றும் எலிஷா கிரே மற்றும் பலர் தொலைபேசியைக் கண்டுபிடித்த பெருமைக்குரியவர்கள். இருப்பினும், தொலைபேசியைக் கண்டுபிடித்தவர் என்ற தலைப்பு விவாதத்திற்குரியது. 1870 களில், அலெக்சாண்டர் கிரஹாம் பெல் மற்றும் எலிஷா கிரே ஆகிய இரண்டு புகழ்பெற்ற கண்டுபிடிப்பாளர்களும் மின்சார கம்பிகளில் ஒலியை கடத்தக்கூடிய சாதனங்களை சுயாதீனமாக உருவாக்கினர். இரண்டு சாதனங்களும் ஒரே தேதியில் காப்புரிமை அலுவலகத்தில் பதிவு செய்யப்பட்டன. இந்த வழக்கில் பெல் வெற்றி பெற்ற பிரச்சினையில் சட்டப் போராட்டம் நடந்தது. இவ்வாறு, 1876 ஆம் ஆண்டு மார்ச் 7 ஆம் தேதி அமெரிக்காவின் காப்புரிமை மற்றும் வர்த்தக முத்திரை அலுவலகம் (ருளுீவுழு) தொலைபேசிக்கான காப்புரிமையைப் பெற்ற முதல் நபர் அலெக்சாண்டர் கிரஹாம் பெல் ஆவார்.

அலெக்சாண்டர் கிரஹாம்பெல் 1847 இல் ஸ்காட்லாந்தில் உள்ள எடின்பரோ நகரத்தில் பிறந்தார். எடின்பரோ பல்கலைக் கழகத்தில் ஓராண்டு கல்வி பயின்ற இவர் பின்னர் லண்டன் பல்கலைக்கழகத்திலும் கல்வி கற்றார். இவரது குடும்பத்தினர் காச நோயால் இறந்து விட்ட சூழலில் சிறிதும் தயங்காமல் ஸ்காட்லாந்தை விட்டு வெளியேறி கனடாவில் குடியேறினார். பின் அங்கிருந்து அமெரிக்காவில் உள்ள பாஸ்டன் நகரில் குடியேறினார். இங்கு இருந்தபோதுதான் தொலைபேசியைக் கண்டுபிடித்தார்.

1871 இல் கிரகாம்பெல் பாஸ்டன் நகரில் ஒரு செவிலியர் பள்ளியில் ஆசிரியராக பணியாற்றினார். அப்போது பாஸ்டன் நகரில் பிறவியிலேயே செவிடாக உண்மையாகவும் இருந்த ஜார்ஜ் என்பவருக்கு பயிற்சி அளித்து வந்தார். பணியில் ஈடுபட்டிருந்தாலும் பாடம் எடுக்காத நேரங்களில் பேசும் இயந்திரத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார். பேச கற்றுக் கொடுப்பதற்கு ஒரு இயந்திரம்

கண்டுபிடிக்க வேண்டும் என்று அவருக்கிருந்த ஆர்வம் அவரை தொலைபேசியை கண்டுபிடிக்க தூண்டியது. பின் கிரகாம்பெல் தான் வேலை பார்த்த பள்ளியில் இருந்து விலகி முழு நேரத்தையும் ஆராய்ச்சி செய்வதில் செலவிட்டார். ஒலியின் அளவை பதிவு செய்யக்கூடிய மின் கருவி அமைக்கும் முயற்சியில் ஈடுபட்டார் கிரகாம் பெல்.

குறிப்பு

மின்சாரம் பாயும் கம்பியானது ஒலி அதிர்வை நடத்த முடியுமானால் மனிதனுடைய பேச்சையும் ஏன் கடத்தக் கூடாது என்று சிந்தித்து ஆராய முற்பட்டார் கிரகாம்பெல் . தன் உதவியாளர் வாட்சனின் உதவியுடன் கையில் கிடைத்த பொருளையெல்லாம் செலவிட்டு சுமார் நான்கு ஆண்டுகள் தீவிரமாக ஆராய்ந்தார். 1876 மார்ச் 10ஆம் நாள் தனது கருவியில் ஆராய்ச்சி செய்து கொண்டிருந்த போது எதிர்பாராதவிதமாக அவரது உடையில் பேட்டரி ஆயுள் சிந்திவிடவே வாட்சன் இங்கே வாரும் என்று அழைத்தார். ஆனால் அந்த ஒலியானது அவர்களது இயந்திரத்தில் அடுத்த முனையில் வேலையில் ஈடுபட்டிருந்த வாட்சனிடம் தெளிவாக கேட்டது. இவ்வாறு தொலைபேசி கிரகாம்பெல்லால் கண்டுபிடிக்கப்பட்டது.

இந்த முதல் தொலைபேசியில், ஒலி அலைகள் மின்னோட்டத்தை தீவிரம் மற்றும் அதிர்வெண்ணில் வேறுபடுத்தி, மெல்லிய, மென்மையான இரும்புத் தகடு-உதரவிதானம் எனப்படும்-அதிர்வை ஏற்படுத்தியது. இந்த அதிர்வுகள் காந்தமாக இருந்தன.மற்றொரு, தொலைதூர கருவியில் உதரவிதானத்துடன் இணைக்கப்பட்ட மற்றொரு கம்பிக்கு அனுப்பப்படுகிறது. அந்த உதரவிதானம் அதிரும் போது, அசல் ஒலி பெறும் கருவியின் காதில் பிரதிபலிக்கும். இந்த தொழில்நுட்பத்தை முழுமையாக்க முயற்சிக்கையில், பெல் முதலீட்டாளர்களின் குழுவால் ஆதரிக்கப்பட்டது. தற்போது யுவுரூவு என அழைக்கப்படும் பெல் டெலிபோன் நிறுவனம் 1877 இல் நிறுவப்பட்டது. 1915 ஆம் ஆண்டில், நியூயார்க்கிலிருந்து சான் பிரான்சிஸ்கோவிற்கு வாட்சனுக்கு பெல் முதல் கண்டம் தாண்டிய தொலைபேசி அழைப்பை செய்தார்.

கிரகாம்பெல் கண்டுபிடித்த டெலிபோன் முதன்முதலாக அமெரிக்காவில் பாஸ்டன் சமர்வில் ஆகிய நகரங்களுக்கு இடையே 1877 ஏப்ரல் மாதம் ஆரம்பித்து வைக்கப்பட்டது. அதே ஆண்டு ஆகஸ்ட் மாதம் 778 டெலிபோன்கள் பயன்படுத்தப்பட்டன. டெலிபோன் காப்புரிமையை 1876 மார்ச் 7 ஆம் தேதி பெற்றார். டெலிபோனை

கண்டுபிடித்ததுடன் போட்டோ போன், கிராபோபோன் போன்றவற்றையும் அமைத்தார். ஒளிக்கற்றை மூலம் ஒளியைக் கடத்தும் ஒரு வகை ரேடியோ போன்றது போட்டோ போன் என குறிப்பிடலாம். இவை தவிர பறத்தல் பற்றிய ஆராய்ச்சியிலும் ஈடுபட்டார்.

**உங்கள் முன்னேற்றத்தை சோதித்தறிக**

4. பெல் தொலைபேசி நிறுவனம் எந்த ஆண்டில் நிறுவப்பட்டது?

5. 1876 இல் அமெரிக்காவின் காப்புரிமை மற்றும் வர்த்தக முத்திரை அலுவலகம் (ருளுீவுழு) மூலம் தொலைபேசிக்கான காப்புரிமையைப் பெற்ற விஞ்ஞானியின் பெயரைக் குறிப்பிடவும்.

## 9.5 தந்திகள்

உலகில் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு செய்திகளை அனுப்புவதற்கு தந்தி முறை பயன்படுத்தப்படுகிறது. இது பல்வேறு நிகழ்ச்சிகளையும் செய்திகளையும் பலதரப்பட்ட இடங்களுக்கும் வேகமாகவும் ஒரே சமயத்தில் செய்வதற்கு ஒரு பெரிய சிறந்த சாதனமாக விளங்குகிறது. இந்த அணைக்கும் கருவியை கண்டுபிடித்து உலகிற்கு அளித்தவர் அமெரிக்காவை சேர்ந்த அறிவியல் அறிஞரான சாமுவேல் மோர்ஸ் என்பவர் ஆவார். இவரது கண்டுபிடிப்பு இன்று உலகில் பல வகைகளிலும் சிறப்பாக பயன்பட்டு வருகிறது.

டெலிகிராப் என்ற வார்த்தை கிரேக்க வார்த்தைகளான டெலி, அதாவது “தொலைவு“ மற்றும் கிரா.்.பின், “எழுதுதல்“ என்று பொருள்படும். தொலைவில் குறியிடப்பட்ட சமிக்ஞை மூலம் தகவல்களைப் பரிமாற்ற அனுமதிக்கும் சாதனம் அல்லது அமைப்பு தந்தி எனப்படும். பல தந்தி அமைப்புகள் பல நூற்றாண்டுகளாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன, ஆனால் இந்தச் சொல் 19 ஆம் நூற்றாண்டின் மத்தியில் உருவாக்கப்பட்டது மற்றும் ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக கம்பி அல்லது வானொலி அலை மூலம் அச்சிடப்பட்ட தகவல்களை அனுப்புவதற்கான முக்கிய வழிமுறையாக இருந்த மின்சார தந்தியைக் குறிக்கும்.

18 ஆம் நூற்றாண்டின் இறுதியில் பிரான்சில் ஆப்டிகல் செமா.்.போர் அமைப்பை விவரிக்க டெலிகிராப் பயன்படுத்தப்பட்டது.

இருப்பினும், பதிவுசெய்யப்பட்ட வரலாற்றிற்கு முன்பே பல்வேறு வகையான தந்தி தொடர்புகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. தொலைவில் உள்ள தகவல்தொடர்பு முறைகள் நெருப்பு, டிரம்ஸ், புகை மற்றும் சூரியனின் பிரதிபலித்த கதிர்கள் போன்ற ஊடகங்களைப் பயன்படுத்தின. தீப்பந்தங்கள் மற்றும் கொடிகள் மூலம் வழங்கப்பட்ட காட்சி சமிக்ஞைகள் குறுகிய தூர தகவல்தொடர்புக்கு பயன்படுத்தப்பட்டன, மேலும் 20 ஆம் நூற்றாண்டில், உலகின் கடற்படைகள் இரண்டு-கொடி செமா∴போர் அமைப்பை பரவலாகப் பயன்படுத்தியபோதும் தொடர்ந்து பயன்படுத்தப்பட்டன.

1891ஆம் ஆண்டு அமெரிக்காவில் பிறந்த சாமுவேல் மோர்ஸ் அறிவியல் ஆராய்ச்சியில் ஆர்வம் கொண்டிருந்தார். முதலில் இவரது கவனம் மின் விசையில் ஈடுபட்டிருந்தது. இந்த மின்விசை பற்றி முன்பு வாழ்ந்திருந்த அறிவியல் அறிஞர்களான கேல்வின், போல்ட் ஆகியோர் எழுதிய ஆய்வு நூல்களையும் மைக்கேல் பாரடே ஓம் முதலானவர்களின் நூல்களையும் நன்கு படித்து அறிந்தார். பாரடேயின் மின்காந்த சோதனைகளைப் பற்றி அறிந்தார். அப்போதுதான் அவர் எவ்வளவு தூரம் ஆனாலும் கம்பி வழியே மின்விசை செல்லும் என்றால் செய்திகளையும் மின் விசை மூலம் அனுப்பலாம் என்று எண்ணினார்.

இரும்புத்துண்டு மின்காந்தம் ஆகும்படி எவ்வாறு மின்விசை கம்பியை சுற்றுவது என்று நியூயார்க் பல்கலைக்கழக பேராசிரியர் ஒருவர் மோர்ஸிக்கு சுற்றிக்காட்டியிருந்தார். அதை வைத்து மோர்ஸ் பல சோதனைகளைச் செய்தார். கடைசியாக நகரும் காகித நாடாவின் குறுக்கே இவர் ஒரு பென்சிலை இழுக்கும்போது மின்காந்தம் அதற்கு ஏற்றபடி இயங்கியது. அதன்படி தந்தி உருவாக்கப்பட்டது. ஆனால் தந்தியின் வழியாக மின் அலைகளை ஒரு குறிப்பிட்ட தொலைவு வரை மட்டுமே அனுப்ப முடியும் என்று உணர்ந்தார். அதாவது மின்காந்தம் 22 மைல் தூரத்திற்கு அப்பால் இருக்குமானால் அதை ஒரு மின்கலத் தொகுப்பினால் இயக்க முடியவில்லை.

எனவே மோர்ஸ் ஜோசப் ஹென்றி என்பவர் உடன் கலந்து பேசியும் அவருடைய உதவியால் நெடுந்தொலைவு தந்தி அனுப்பும் முறையைக் கண்டுபிடித்தார். மோர்ஸ் தான் கண்டுபிடித்த தந்தியை 1836இல் பொது மக்களுக்கு விளக்கிக் காட்டுகிறார். இந்த தந்தியின் மூலம் அலைகளை அனுப்பும்போது ஒரு வகை கோடுநம்பரில்

அனுப்பவேண்டும். அதையும் பின்னால் எளிதில் அறிந்து கொள்ள வேண்டும் என்று எண்ணியஅவரது மனதில் ஒரு எண்ணம் தோன்றியது. அதன்படி ஒலி மூலமாக குறியீடு அமைத்துக் கொண்டார். இவரது முறையில் செய்தி அனுப்பும் பகுதிக்கு மோர்ஸ் சாவி என்றும் செய்தி வாங்கும் பகுதிக்கு மோர்ஸ் ஒலிப்பான் என்றும் அழைக்கப்பட்டன. கட், கடா என்ற முறையில் ஒலியை எழுப்புவதன் மூலம் மோர்ஸ் முறையில் தந்திகள் அனுப்பப்பட்டன. புள்ளி கட் என்ற ஒலியையும் கோடு கடா என்று ஒலியையும் குறிக்கும்.

மோர்ஸின் உதவியாளர் ஆல்.ஃ.பிரட் வெல், பெறப்பட்ட செய்திகளைப் பதிவுசெய்வதற்கான பதிவு எனப்படும் கருவியை வடிவமைத்தார். மோர்ஸின் அமைப்பின் முதல் பரிசோதனை அவரது நண்பர்களுக்காக 1837 இல் அவரது பணியிடத்தில் நடத்தப்பட்டது. 1843 இல் மோர்ஸ் வாஷிங்டன், டி.சி. மற்றும் பால்டிமோர் இடையே 60 கிமீ நீளமான டெலிகிராப் டெலிகிராப் அமைப்பை உருவாக்க அமெரிக்க அரசாங்கத்தின் உதவி மற்றும் நிதியைத் தேடினார். ரயில் பாதையைத் தவிர மின்கம்பங்களில் கண்ணாடி இன்சுலேட்டர்கள் மூலம் கம்பிகள் இணைக்கப்பட்டன. இந்த அமைப்பு இறுதி செய்யப்பட்டு, 24 மே 1844 அன்று, 'கடவுள் என்ன செய்தார்!' என்ற செய்தியை பரப்புவதன் மூலம் பொது பயன்பாட்டிற்காக தொடங்கப்பட்டது.

1866 வாக்கில், அமெரிக்காவிலிருந்து ஐரோப்பாவிற்கு அட்லாண்டிக் பெருங்கடலின் குறுக்கே ஒரு தந்தி வரி அமைக்கப்பட்டது. இது யுனைடெட் ஸ்டேட்ஸில் தந்தி சகாப்தத்தைத் தொடங்கியது, இது ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக நீடித்தது. 21 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், தந்தியின் பயன்பாடு பரவலாக இல்லை. இது தொலைபேசி, தொலைநகல் இயந்திரம் மற்றும் இணையம் ஆகியவற்றால் மாற்றப்பட்டது. இருப்பினும், இது தகவல்தொடர்பு புரட்சிக்கான அடித்தளத்தை அமைத்தது, இது பிற்கால கண்டுபிடிப்புகளுக்கு வழிவகுத்தது.

வெகுவிரைவில் அமெரிக்கா முழுவதிலும் தந்திக் கம்பங்கள் நடப்பட்டன. பத்து ஆண்டுகள் முடியும் முன்பே தந்தி முறை பல நாடுகளிலும் பயன்பாட்டிற்கு வந்தது. 1850 இல் இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் இடையே கடல் நீரிலும் செல்லும் கேபிள் மூலம் தந்தி அனுப்பும் முறை செயல்படுத்தப்பட்டது. 1886 இல் அமெரிக்காவையும்

ஐரோப்பாவையும் இணைக்கும் கடல் தந்தி வழிகள் வந்துவிட்டன. அனைத்துக்கும் அடிப்படையான தந்தி அனுப்பும் கருவியை கண்டுபிடித்த பெருமை சாமுவேல் மோர்ஸ் சாரும்.

குறிப்பு

## 9.6 தாமஸ் ஆல்வா எடிசன்

தாமஸ் ஆல்வா எடிசன் ஒரு அமெரிக்க கண்டுபிடிப்பாளர் ஆவார், அவர் 1847 ஆம் ஆண்டு பிப்ரவரி 11 ஆம் தேதி ஓஹியோவின் மிலன் நகரில் நடுத்தர வர்க்க பெற்றோரான சாமுவேல் மற்றும் நான்சி எடிசன் ஆகியோருக்கு பிறந்தார். அவர் ஏழு குழந்தைகளில் இளையவர். அவர் மிகவும் ஆர்வமுள்ள பையன். அவருக்கு ஐந்து வயதாக இருந்தபோது, அவரது பெற்றோர் பக்கத்து வீட்டில் பிறந்த வாத்து முட்டைக் கூட்டில் அவர்பொறுமையாக அமர்ந்திருப்பதைக் கண்டனர். குறைந்தபட்சம் பத்து மணி நேரமாவது அங்கே இருந்த அவர், குளிருடன் நீலமாக இருந்தார். அவர் முட்டைகளை அடை காக்க முடியுமா என்று பார்க்க முயன்றார்.

தாமஸ் எடிசனுக்கு ஏழு வயதாக இருந்தபோது, அவரது பெற்றோர் மிச்சிகனில் உள்ள போர்ட் ஹூரனுக்கு குடிபெயர்ந்தனர், அங்கு அவரது தந்தைக்கு வேலை கிடைத்தது. தாமஸ் எடிசனின் ஆரம்ப ஆண்டுகளில் உடல்நலக்குறைவு இருந்தது, இது பள்ளியில் அவரது படிப்பைப் பாதித்தது. அவரது பள்ளி ஆசிரியர் அவர் ஒரு வளர்ச்சி குன்றிய குழந்தை என்று கூறினார். எனவே அவரது தாயார் சில மாதங்கள் முறையான கல்விக்குப் பிறகு அவரைப் பள்ளிக்கு அழைத்துச் சென்றார். எவ்வாறாயினும், தாமஸ் பள்ளி ஆசிரியராக இருந்த தனது தாயிடமிருந்து ஒரு அசாதாரண கல்வியைப் பெற்றார். அவர் பத்து வயதிற்கு முன்பே, பார்கேயின் இயற்கை தத்துவப் பள்ளி, கிப்பனின் சரிவு மற்றும் ரோமானியப் பேரரசின் வீழ்ச்சி, அறிவியல் அகராதி மற்றும் சியாரின் தி வொண்டர்ஸ் ஆ.்.ப் தி வேர்ல்ட் ஆகியவற்றைப் படித்தார். அத்தகைய வாசிப்பு அவரது உள்ளார்ந்த பரிசோதனையின் தரத்தைத் தூண்டியது. படிப்படியாக, அவரது பண்ணை வீட்டில் பாதாள அறை ஆய்வகமாக மாறியது. புதிய அறிவியல் புத்தகங்கள் தோன்றியவுடனேயே வாங்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

குறிப்பு

12 வயதில், தாமஸ் எடிசன் நிதி சுதந்திரத்திற்கு தலைமை தாங்க முடிவு செய்தார். போர்ட் ஹுரன் மற்றும் டெட்ராய்ட் இடையே ஓடும் ரயில்களில் மிட்டாய், செய்தித்தாள்கள் மற்றும் காய்கறிகளை விற்பதன் மூலம் கிராண்ட் ட்ரங்க் ரயில்வேயில் தனது வாழ்க்கையைத் தொடங்கினார். 1862 ஆம் ஆண்டில், டெட்ராய்ட் ஃப்ரீ பிரஸ் வெளியிட்ட தினசரியின் 1000 பிரதிகளை அவர் விநியோகித்தார். எடிசனுக்கு 12 வயது ஆகிய போது குடும்பத்தை வறுமை சூழ்ந்ததால் ரயிலில் பேப்பர் விற்கும் பையனாக பணிபுரிய தொடங்கினார். இவரின் சுறுசுறுப்பும் நல்ல குணமும் ரயில்வே நிர்வாகத்தில் இவருக்கு நல்ல பெயரை தேடித்தந்தன. எனவே நிர்வாகத்தின் அனுமதியின் பேரில் ரயில் பெட்டி ஒன்றில் தனது சிறிய சோதனையை சாலையை அமைத்துக் கொண்டு ஓய்வு நேரத்தில் ரசாயன பரிசோதனை நடத்தி வந்தார். இது அந்த ரயிலில் இருந்த கார்டுக்கு கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஒருநாள் ரயில் ஓடிக் கொண்டிருந்தபோது எடிசனின் பரிசோதனை பெட்டியில் தீப்பிடித்துக் கொண்டது. ஆனால் உடனடியாக தீ அணைக்கப்பட்டது. இதனை பயன்படுத்திக் கொண்டு எடிசனின் கன்னத்தில் அறைந்தார்.இதனால் அவனுக்கு ஒரு காது செவிடாக நேர்ந்தது. இதனால் வாழ்நாள் முழுவதும் அவர் செவிடராகவே இருக்க நேரிட்டது. இந்த சம்பவத்திற்கு பிறகு ஓடும் ரயிலில் பரிசோதனை நடத்த எடிசன் அனுமதிக்கப்படவில்லை.

ஒரு சமயத்தில் தூரத்தில் வேகமாக வரும் ரயில் வண்டியை கவனிக்காமல் தண்டவாளத்தில் ஒரு குழந்தை விளையாடிக் கொண்டிருந்தது. அதனை கண்ட எடிசன் தன் உயிரையும் பொருட்படுத்தாது விரைந்து சென்று குழந்தையைக் காப்பாற்றினார். குழந்தையின் தந்தையை அந்த ரயில் நிலையத்தில் தந்திக் கருவி இயக்குபவர் ஆவார். அவர் தன் குழந்தையை காப்பாற்றிய எடிசனுக்கு நன்றிக்கடனாக தந்திக் கருவி இயங்கும் விதத்தை சொல்லிக் கொடுத்ததோடு தந்தி நிலையத்தில் பகுதி நேர வேலைக்கும் ஏற்பாடு செய்தார். இப்போது அவருக்குக் கிடைத்த ஓய்வு நேரத்தை அறிவியல் நூல்கள் படிப்பதிலும் சோதனையை செய்வதிலும் பயன்படுத்தினார்.

நியூயார்க் நகரில் ஒரு தந்தி நிறுவனத்தில் பழுதடைந்த தந்திக் கருவியை சரி செய்து கொடுத்ததால் அந்த நிறுவனத்தில் அவருக்கு வேலை கொடுக்கப்பட்டது. இப்போது ஓரளவிற்கு அவரிடம் பணம்

சேர்ந்ததால்நியுயார்க் நகருக்கு அருகே மென்லோபார்க் என்ற பகுதியில் பெரியதொரு இடத்தை வாங்கி அங்கு ஒரு தொழிற்சாலையும் ஆய்வுக் கூடத்தையும் அமைத்துக்கொண்டு அறிவியல் ஆய்வுகளில் ஈடுபட்டார். இடைவிடாத ஆய்வின் காரணமாக எண்ணற்ற அறிவியல் கண்டுபிடிப்புகளை எடிசன் கண்டுபிடித்தார்.

**எடிசனின் அறிவியல் கண்டுபிடிப்புகள்**

- 1869ல் பேச்சை பதிவு செய்து அதனை திரும்ப ஒலிக்கச் செய்யும் கருவியை கண்டுபிடித்தார்
- தந்தித்துறையில் ஒரே வழியில் நான்கு செய்திகள் அனுப்பும் முறையை கண்டுபிடித்தார்.
- மின்சாரத்தால் ஒலிப்பதிவு செய்யும் கருவியை கண்டுபிடித்தார். அவரது தானியங்கி ஒலிப்பதிவு செய்யும் கருவியால் கம்பி மூலம் ஒரு பகுதியில் இருந்து அடுத்த பகுதிக்கு செய்தியை ஆப்பரேட்டர் இல்லாமல் அனுப்பப்பட்டது.
- தொலைபேசிக் கருவியை கிரகாம்பெல் கண்டு பிடிப்பதற்கு சில தினங்களுக்கு முன்னர் எடிசன் கண்டு பிடித்து விட்டார். ஆனால் அதற்கான உரிமை சான்றிதழ் கிரகாம்பெல்லுக்கு கொடுக்கப்பட்டுவிட்டது.
- வானொலியின் முக்கிய கருவியான மைக்ராஸ்கோப்பை கண்டுபிடித்தார்.
- வெப்பத்தை அளந்தறியக்கூடிய மிக நுட்பமான கருவியை கண்டுபிடித்தார்.
- மக்களால் நுகர முடியாத வாசனையையும் உணர்ந்தறிய வல்ல கருவியை கண்டுபிடித்தார்.
- பாறைகளிலும் மண்ணிலும் உள்ள இரும்பைப் பிரித்தெடுக்க பாறைகளைத் தூளாக்க செய்யும் மிகப்பெரிய இயந்திரங்களைக் கண்டுபிடித்தார்
- கிராமபோன் கருவியை கண்டுபிடித்தார்
- 1912ஆம் ஆண்டில் பேசும் கருவியையும் திரைப்படக் கருவியையும் ஒன்று சேர்த்து அமைக்கப்பட்ட சினிடாஸ்கோப் என்ற கருவியை கண்டுபிடித்தார். இதன் மூலம் திரைப்படத்தொழிலுக்கு அடிப்படையிடப்பட்டது.

குறிப்பு

- மின்சாரக் குறியீடுகளை ஒலியாகவும், ஒலியை மின்சாரக் குறியீடுகளாகவும் மாற்றும் கருவியை கண்டுபிடித்தார்.
- மின் உற்பத்தி செய்யும் கருவியை சீர் திருத்தி அமைத்தார்
- மின்கல அடுக்குகளில் மின்சக்தியை சேகரிக்கும் முறையை கண்டுபிடித்தார்.
- ஓடும் கப்பல், ரயில்களில் இருந்து தந்தி குறியீடுகளை ஒலிபரப்பு முறையைக் கண்டுபிடித்தார்.

அவரின் மிகப்பெரிய சாதனைகளில் ஒன்று மின்சார விளக்குகள் ஆகும். காற்று இல்லாத கண்ணாடி குமிழுக்குள் மெல்லிய உலோக இழையில் மின்சாரத்தை பாய்ச்சி ஒளி கிடைக்கும் என்பதை நிரூபித்துக் காட்டினார். இந்த நிகழ்வு எடிசன் விளைவு என்று அழைக்கப்படுகிறது. இந்த விளைவு முக்கியமான பயன்பாட்டுக் கருத்தாக மட்டும் அமையாமல் நடைமுறையில் பெருமளவுக்கு பயன்படக் கூடியதாக அமைந்தது. இந்த விளைவின் அடிப்படையிலேயே விரைவிலேயே வெற்றிடங்கள் உருவாக்கப்பட்டது. அத்துடன் மின்னியல் தொழில் தோன்றுவதற்கும் இது வழிவகுத்தது.

மின் விளக்குகள் அமைக்க மின் உற்பத்தி நிலையம் அமைத்து வீடும் தெருக்களுக்கும் விளக்கு எரிய மின்சாரம் விநியோகம் செய்தார். மின்சார ரயிலை கண்டுபிடித்து பெருமையும் இவரையே சாரும். எடிசன் மின்சாரம் தயாரித்து, மின் பல்புகளை உருவாக்கியது மட்டுமின்றி, மின்சாரத்தில் இருந்து தயாரிக்கப்படும் ஒளியின் வீட்டு உபயோகத்திற்கான அனைத்து ஏற்பாடுகளையும் தனது தனிப்பட்ட செலவில் செய்தார். மின்கடத்தப்பட்ட குழாய்களில் கம்பிகளை நிலத்தடியில் வைக்கும் திட்டத்தை அவர் முடித்தார். செப்டம்பர் 4, 1882 இல், அவர் புதிய விளக்கு அமைப்பை இயக்கினார். டவுன்டவுன் மாவட்டத்தின் ஜன்னல்கள் திடீரென்று உயிர்ப்பித்தன. இந்தக் காட்சி ஒரு ஆழமான உணர்வை உருவாக்கியது. பலர் அவரை “மென்லோ பூங்காவின் வழிகாட்டி“ என்று சரியாக அழைத்தனர்.இவ்வாறு தாமஸ் ஆல்வா எடிசன் தனது ஆராய்ச்சியின் மூலம் ஆயிரத்திற்கும் மேற்பட்ட கண்டுபிடிப்புகளைச் செய்தார்.

குறிப்பு

**உங்கள் முன்னேற்றத்தை சோதித்தறிக**

6. எடிசன் தனது முதல் தொழில்துறை ஆராய்ச்சி ஆய்வகத்தை எப்போது, எங்கு திறந்தார்?

7. 'தி விஸார்ட் ஆ.்.ப் மென்லோ பார்க்' என்ற பட்டம் வழங்கப்பட்ட விஞ்ஞானி மற்றும் கண்டுபிடிப்பாளரின் பெயரைக் குறிப்பிடவும்?

## 9.7 உங்கள் முன்னேற்றக் கேள்விகளைச் சரிபார்க்க பதில்கள்

1. ஜான் ரோபக் ஈய அறைகளில் கந்தக அமிலத்தை பெருமளவில் உற்பத்தி செய்யும் முறையைக் கண்டுபிடித்தார்.
2. சர் ஜான் லாவ்ஸ் தனது நோக்கத்திற்காக கட்டப்பட்ட ரோதம்ஸ்டெட் ஆராய்ச்சி நிலையத்தில் விவசாயத்திற்காக செயற்கையாக தயாரிக்கப்பட்ட உரங்களை தயாரிப்பதில் முன்னோடியாக இருந்தார்.
3. வில்லியம் ஹென்றி பெர்கின் முதல் செயற்கை சாயத்தை லண்டனில் கண்டுபிடித்தார்.
4. தற்போது யுவுரூவு என அழைக்கப்படும் பெல் தொலைபேசி நிறுவனம் 1877 இல் நிறுவப்பட்டது.
5. அலெக்சாண்டர் கிரஹாம் பெல் 1876 ஆம் ஆண்டில் அமெரிக்காவின் காப்புரிமை மற்றும் வர்த்தக முத்திரை அலுவலகம் (ருளுீவுழு) மூலம் தொலைபேசிக்கான காப்புரிமையைப் பெற்ற முதல் விஞ்ஞானி ஆவார்.
6. 1876 இல், எடிசன் தனது முதல் தொழில்துறை ஆராய்ச்சி ஆய்வகத்தை நியூ ஜெர்சியில் உள்ள மென்லோ பூங்காவில் திறந்தார்.
7. தாமஸ் ஆல்வா எடிசனுக்கு 'தி விஸார்ட் ஆ.்.ப் மென்லோ பார்க்' என்ற பட்டம் வழங்கப்பட்டது.

## 9.8 சுருக்கம்

- பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வேதியல் துறையில் மிகப் பெரும் முன்னேற்றம் நிகழ்ந்தது. நவீன தொழில்நுட்பங்கள் மூலம் ஏற்பட்ட புதிய கண்டுபிடிப்புகள் மிகப்பெரிய விளைவுகளை ஏற்படுத்தின.

**குறிப்பு**

- அந்நூற்றாண்டின் இறுதி ஐந்து ஆண்டுகளில் வேதியல் முற்றிலும் புதியதொரு அறிவியலாக உருவாகியது.
- நெசவு தொழிலுக்கு சில ரசாயன பொருட்கள் தேவைப்பட்டன. அதனால் அறிவியலின் தந்தை நெசவுத்தொழில் என்று கூறப்பட்டது.
- ரசாயன தொழிலுக்கு மிக முக்கிய தேவையான சாய பொருள் தயாரிப்பு 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வளர்ச்சி அடைந்தது. சாய தொழிலுக்கு ஒரு அடிப்படையை அமைத்துக் கொடுத்தவர் ஹாப்மேன் என்ற வேதியல் அறிஞர் ஆவார்.
- காரோ என்பவர் பழுப்பு மற்றும் நீல நிற சாயத்தையும் பச்சை நிறச் சாயத்தை பிஷர் என்பவரும் சிவப்பு சாயத்தை போல்டிகர் என்பவரும் கண்டுபிடித்தனர்.
- சாயத்தொழில் முதன் முதலில் இங்கிலாந்தில் ஆரம்பமானது என்றாலும் பின்னர் ஜெர்மனி தான் சாய தொழிலின் மைய இடமாக விளங்கியது.
- பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை சாதாரண துப்பாக்கி மருந்துதான் வெடி மருந்தாக பயன்பட்டு வந்தது.
- சுரங்கங்களில் வெடிப்பு ஏற்படுத்துவதற்கும் துப்பாக்கி மருந்துதான் பயன்படுத்தப்பட்டு வந்தது.
- பாதுகாப்பான வெடி மருந்தை கண்டுபிடித்தவர் ஆல்பிரட் நோபல் என்பவர் ஆவார். இவர் கண்டுபிடித்த பொருளுக்கு டைனமைட் என்று பெயர்.
- இவர் 1866 இல் நைட்ரோ கிளிசரினுடன் கிசல்கர் என்ற பொருளைச் சேர்த்து பாதுகாப்பான வெடி பொருளாக உருவாக்கினார்.
- ஆல்ஃபிரட் நோபல் 7 மே 1867 இல் இங்கிலாந்திலும், 19 அக்டோபர் 1867 இல் ஸ்வீடனிலும் டைனமைட்டைக் கண்டுபிடித்ததற்காக காப்புரிமையைப் பெற்றார்.
- இதற்குப் பிறகு, டைனமைட் பயன்பாடு கருப்பு தூள் மற்றும் நைட்ரோகிளிசரின் ஆகியவற்றிற்கு பாதுகாப்பான மாற்றாக வேகமாக பிரபலமடைந்தது.
- இவர் ராணுவத்திற்கு பயன்படும் வெடி பொருட்களை அதிக அளவில் தனது தொழிற்சாலையில் தயாரித்தார்.

- இந்த வெடிமருந்து போர்க்களத்தில் மனித உயிர்களை கொல்வதற்கு பயன்பட்டது. அதாவது பெருமளவில் வெடிகுண்டுகள் தயாரிக்கப்பட்டன. மக்கள் அவரை மரண வணிகர் என்று சாற்றினர்.
- ஆண்டுதோறும் இலக்கியம், வேதியியல், இயற்பியல், மருத்துவம் ஆகியவற்றில் அரிய கண்டுபிடிப்புகளை கண்டுபிடித்தவர்களுக்கு பரிசு வழங்கும் திட்டத்தை தொடங்கினார்.
- 1896ல் நோபல்பவுண்டேசன் என்ற நிறுவனம் அமைக்கப்பட்டது. 1901 ஜனவரி முதல் தேதி அது தன் பணியைத் தொடங்கியது.
- அதன்படி ஒவ்வொரு ஆண்டும் நோபல் பரிசு வழங்கப்பட்டு வருகிறது.
- அலெக்சாண்டர் கிரஹாம்பெல் 1847 இல் ஸ்காட்லாந்தில் உள்ள எடின்பரோ நகரத்தில் பிறந்தார். எடின்பரோ பல்கலைக் கழகத்தில் ஓராண்டு கல்வி பயின்ற இவர் பின்னர் லண்டன் பல்கலைக்கழகத்திலும் கல்வி கற்றார்.
- இரும்புத்துண்டு மின்காந்தம் ஆகும்படி எவ்வாறு மின்விசை கம்பியை சுற்றுவது என்று நியூயார்க் பல்கலைக்கழக பேராசிரியர் ஒருவர் மோர்ஸிக்கு சுற்றிக்காட்டியிருந்தார். அதை வைத்து மோர்ஸ் பல சோதனைகளைச் செய்தார்.
- இவரது முறையில் செய்தி அனுப்பும் பகுதிக்கு மோர்ஸ் சாவி என்றும் செய்தி வாங்கும் பகுதிக்கு மோர்ஸ் ஒலிப்பான் என்றும் அழைக்கப்பட்டன.
- கட், கடா என்ற முறையில் ஒலியை எழுப்புவதன் மூலம் மோர்ஸ் முறையில் தந்திகள் அனுப்பப்பட்டன.
- புள்ளி கட் என்ற ஒலியையும் கோடு கடா என்று ஒலியையும் குறிக்கும்.
- தாமஸ் ஆல்வா எடிசன் ஒரு அமெரிக்க கண்டுபிடிப்பாளர் ஆவார், அவர் 1847 ஆம் ஆண்டு பிப்ரவரி 11 ஆம் தேதி ஓஹியோவின் மிலன் நகரில் நடுத்தர வர்க்க பெற்றோரான சாமுவேல் மற்றும் நான்சி எடிசன் ஆகியோருக்கு பிறந்தார்
- நியூயார்க் நகரில் ஒரு தந்தி நிறுவனத்தில் பழுதடைந்த தந்திக் கருவியை சரி செய்து கொடுத்ததால் அந்த நிறுவனத்தில் அவருக்கு வேலை கொடுக்கப்பட்டது.

- இப்போது ஓரளவிற்கு அவரிடம் பணம் சேர்ந்ததால்நியுயார்க் நகருக்கு அருகே மென்லோபார்க் என்ற பகுதியில் பெரியதொரு இடத்தை வாங்கி அங்கு ஒரு தொழிற்சாலையும் ஆய்வுக் கூடத்தையும் அமைத்துக்கொண்டு அறிவியல் ஆய்வுகளில் ஈடுபட்டார்.
- மின்கல அடுக்குகளில் மின்சக்தியை சேகரிக்கும் முறையை கண்டுபிடித்தார்.
- ஓடும் கப்பல், ரயில்களில் இருந்து தந்தி குறியீடுகளை ஒலிபரப்பு முறையைக் கண்டுபிடித்தார்.
- அவரின் மிகப்பெரிய சாதனைகளில் ஒன்று மின்சார விளக்குகள் ஆகும். காற்று இல்லாத கண்ணாடி குமிழுக்குள் மெல்லிய உலோக இழையில் மின்சாரத்தை பாய்ச்சி ஒளி கிடைக்கும் என்பதை நிரூபித்துக் காட்டினார்.
- இடைவிடாத ஆய்வின் காரணமாக எண்ணற்ற அறிவியல் கண்டுபிடிப்புகளை எடிசன் கண்டுபிடித்தார்.

## 9.9 முக்கிய வார்த்தைகள்

டெட்டனேட்டர்: இது ஒரு சிறிய அளவிலான வெடிபொருள் அல்லது ஒரு வெடிகுண்டு அல்லது பிற வெடிமருந்து சாதனத்தை வெடிக்கப் பயன்படும் மின்சார அல்லது மின்னணு உபகரணங்களின் ஒரு பகுதி.

கால்வனோமீட்டர்: இது சிறிய மின்னோட்டம் மற்றும் மின்னழுத்தம் இருப்பதைக் கண்டறிய அல்லது அவற்றின் அளவை அளவிட பயன்படும் சாதனம்.

சாதனங்கள்: இது பொதுவாக ஒரு குறிப்பிட்ட செயல்பாட்டிற்குப் பயன்படுத்தப்படும் எந்திரம், உபகரணங்கள் அல்லது தளபாடங்களின் குழுவைக் குறிக்கிறது.

காப்புரிமை: இது ஒரு வகையான அறிவுசார் சொத்து ஆகும், இது ஒரு கண்டுபிடிப்பின் பொது வெளிப்பாட்டை வெளியிடுவதற்கு ஈடாக ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு ஒரு கண்டுபிடிப்பை உருவாக்குதல், பயன்படுத்துதல் அல்லது விற்பனை செய்வதிலிருந்து மற்றவர்களை விலக்குவதற்கான சட்டப்பூர்வ உரிமையை அதன் உரிமையாளருக்கு வழங்குகிறது.

∴போனோகிரா∴ப்: இது ஒரு சுழலும் வட்டு அல்லது உருளையில் சுழல் பள்ளத்தைத் தொடர்ந்து ஒரு எழுத்தாணி அல்லது ஊசியின் அதிர்வு மூலம் ஒலிகளை மீண்டும் உருவாக்குவதற்கான ஒரு கருவியாகும்.

## 9.10 சுய மதிப்பீடு கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுகிய விடை வினாக்கள்**

1. ஆல்பிரட் நோபலின் குறிப்பிடத்தக்க டைனமைட் கண்டுபிடிப்பு பற்றி சுருக்கமாக குறிப்பிடவும்.
2. மின்சார பல்பு எப்படி கண்டுபிடிக்கப்பட்டது?
3. தாமஸ் ஆல்வா எடிசனின் வாழ்க்கை வரலாற்றின் கணக்கைத் தயாரிக்கவும். அவர் எப்படி உலகை மாற்றினார்?

**நீண்டவிடை வினாக்கள்**

1. நவீன இரசாயனத் தொழிலின் பரிணாமம் மற்றும் வளர்ச்சியை விவரிக்கவும்.
2. மின்சார தந்தி அமைப்பின் வளர்ச்சி பற்றி விவாதிக்கவும்.
3. அலெக்சாண்டர் கிரஹாம் பெல் மூலம் தொலைபேசியின் தோற்றம் மற்றும் வளர்ச்சியை விளக்குக.

## 9.11 மேலும் வாசிப்புகள்

1. ராஜாராம், கல்பனா. இந்தியாவில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம். இந்தியா: ஸ்பெக்ட்ரம் புக்ஸ் பிரைவேட் லிமிடெட் , 2012.
2. ஹால்டேன், ஜே. பி.எஸ். அறிவியல் மற்றும் இந்திய கலாச்சாரம். இந்தியா: நியூ ஏஜ் பப்ளிஷர்ஸ் பிரைவேட் லிமிடெட், 1965.
3. குப்புராம், ஜி. இந்தியாவில் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப வரலாறு. இந்தியா: தெற்காசியா புத்தகங்கள், 1990.
4. பேரா.வி.முருகன், வரலாற்றில் அறிவியல், பாரதி புத்தகாலயம், சென்னை, 2021

5. எஸ்.வர்கீஸ் ஜெயராஜ், அறிவியல் தொழில்நுட்ப வரலாறு, பாவை பதிப்பகம், 2010

# தொகுதி IV

## 19வது மற்றும் 20 ஆம் நூற்றாண்டுகளில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம்

## அலகு 10

## 20 ஆம் நூற்றாண்டில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம் – ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் - ரோன்ட்ஜென் - மேரி கியூரி - ரூதர்.:.போர்ட் - அணுகுண்டு



### 10.0 அறிமுகம்

19 மற்றும் 20 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அறிவியல் துறையில் வியத்தகு முன்னேற்றங்கள் ஏற்பட்டன. உண்மையில், 19 ஆம் நூற்றாண்டு சில சமயங்களில் அறிவியல் யுகம் என்று

அழைக்கப்படுகிறது. 19 ஆம் நூற்றாண்டின் இறுதியில், அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்தின் ஆற்றல் மற்றும் மதிப்பு பற்றி ஒரு பெரிய நம்பிக்கை இருந்தது. புதிய மற்றும் தீவிரமான வளர்ச்சிகள் நடந்தன. வேதியியல் மற்றும் இயற்பியலில் அவை கோட்பாடு மற்றும் நடைமுறை இரண்டிலும் கணிசமாக வளர்ந்தன. இயற்பியல், வாழ்க்கை அறிவியல் மற்றும் மனித அறிவியல் துறைகளிலும் புதிய மற்றும் தீவிரமான வளர்ச்சிகள் ஏற்பட்டன. 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஒரு புதிய மற்றும் மர்மமான கதிர்வீச்சின் கண்டுபிடிப்பு மருத்துவ இமேஜிங்கில் புரட்சியை ஏற்படுத்தியது. ரேடியம் மற்றும் பொலோனியத்தின் கண்டுபிடிப்பு வேதியியலில் புரட்சியை ஏற்படுத்தி புதிய சகாப்தத்தைக் குறிக்கிறது. சிறப்பு சார்பியல், பொது சார்பியல் மற்றும் குவாண்டம் இயக்கவியல் போன்ற இயற்பியலில் நியூட்டனுக்குப் பிந்தைய கோட்பாடுகளின் வளர்ச்சி அணு ஆயுதங்களின் வளர்ச்சிக்கு வழிவகுத்தது. அணு கட்டமைப்பின் புதிய மாதிரிகள் வேதியியலின் கோட்பாடுகளில் வளர்ச்சிக்கு வழிவகுத்தது.

## 10.1 குறிக்கோள்கள்

இந்த அலகின் முடிவில் கீழ்க்கண்டவற்றைத் தெரிந்துகொள்ள முடியும்.

- நவீன இயற்பியலின் வளர்ச்சியில் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் பங்களிப்பைப் பற்றி விவாதித்தல்
- வில்லியம் ரோன்ட்ஜென் எக்ஸ்-கதிர்களைக் கண்டுபிடித்ததை விளக்குதல்
- அறிவியலில் மேரி கியூரியின் பங்களிப்பின் கணக்கை பகுப்பாய்வு செய்தல்
- அணுக் கோட்பாட்டில் எர்னஸ்ட் ரதர்ஃபோர்டின் பங்களிப்பைப் பற்றி விவாதித்தல்
- அணுகுண்டு கண்டுபிடிப்பை மதிப்பிடுதல்

## 10.2 20 ஆம் நூற்றாண்டில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம்

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இரு உலகப்போர்கள் நிகழ்ந்துள்ளன. 1914 முதல் 1918 வரை முதல் உலகப் போரும் 1939

முதல் 1945 வரை இரண்டாம் உலகப்போரும் நடைபெற்றுள்ளன.உலக நாடுகள் அனைத்தும் தங்கள் சக்தி அனைத்தையும் ஒன்று திரட்டி நடத்திய போர் இந்த உலகப் போர் ஆகும். இக்காலகட்டத்தில் அறிவியல் ஆற்றல்கள் அனைத்தும் போர்க்கருவிகள் தயாரிப்புகளில் செலவிடப்பட்டன. நாட்டின் வருவாய்கள் அனைத்தும் போர்க்கள வெற்றியை நோக்கமாகக் கொண்டே செலவிடப்பட்டன. போக்குவரத்து சாதனங்கள், செய்தி தொடர்பு,கல்வி ,அறிவியல் ஆய்வு ,தொழில் உற்பத்தி அனைத்தும் போர்களை வெற்றியை நோக்கியே திசைதிருப்பபட்டன.

முதல் உலகப் போரின் போது ஜெர்மனி ஏராளமான நீர்மூழ்கிக் கப்பல்களை செய்தது. அவை அட்லாண்டிக் பெருங்கடலில் பயணம் செய்த வணிகக் கப்பல்களை தாக்கி மூழ்கடித்தன. நீர்மூழ்கி கப்பல்கள் எதிரிநாட்டு கப்பல்களை தாக்கி அழிப்பதற்காக செய்யப்பட்டன. முதல் உலகப் போரின்போது ஆகாய விமானங்கள் பொதுவாக வேவு பார்ப்பதற்கு அனுப்பப்பட்டன. ஆனால் இரண்டாம் உலகப் போரின்போது விமானங்கள் குண்டு வீசுவதற்கு பயன்படுத்தப்பட்டன. ராணுவத்தில் பயன்படுத்த அதிவிரைவு விமானங்களின் தேவை உணரப்பட்ட போது வாயுசுழலிகளால் இயங்கும் அதிவேக விமானங்கள் தோன்றின. தரைச் சண்டையில் டாங்கிகள் மிகுதியாக பயன்படுத்தப்பட்டன. பீரங்கிகள் பொருத்தப்பட்ட இந்த டாங்கிகள் கவச மோட்டார்கள் ஆகும். பாறைகளையும், கட்டிடங்களையும் ஊடுருவவல்ல இந்த டாங்கிகள் இரண்டாம் உலகப் போரின்போது ஹிட்லரின் தாக்குதலில் பெரிதும் பயன்பட்டன.

ஒலி அலைகளை பிரதிபலித்து மீண்டும் பூமிக்கு அனுப்பும் கண்ணாடி போன்ற ஒரு அடுக்கு வான் வெளியில் இருப்பது உணரப்பட்டது. இது அயனி மண்டலம் எனப்படும். சிற்றலைகளின் தாவு தூரத்தை அவை வந்தடையும் நேரத்தை வைத்து அதாவது எதிரொலி தத்துவத்தை வைத்து கணக்கிட்டு காட்டினர். இதுவே போரின்போது பயன்பட்ட ராடார் என்ற கருவி உருவாக வழிவகுத்தது. இது எதிரி விமானங்கள் நாட்டின் எல்லைக்குள் வருவதை முன்கூட்டியே தெரிவித்துவிடும் நுட்பம் கொண்டது. ராடார்களின் தோற்றத்திற்கு போர் பற்றிய அச்சமே தூண்டுதலாக இருந்தது.

அறிவியல் வரலாற்றில் அதிவேக முன்னேற்றம் தொடங்கிய இருபதாம் நூற்றாண்டில் ஹெலிகாப்டர் உருவாக்கும் முயற்சியில் அதி தீவிரம் அடைந்தாலும் இரண்டாம் உலகப் போரின் இறுதியில் தான் அது செயல்வடிவம் பெற்றது. சிகொர்ஸ்கி என்ற ரஷியப் பொறியியலாளர் தான் ஹெலிகாப்டரின் தந்தை என கருதப்படுகிறார். இவர் முதலில் பிரான்ஸ் சென்று ஒரு ஹெலிகாப்டரை வடிவமைப்பதில் ஈடுபட்டார். அவரது தொடக்க முயற்சி அவ்வளவாக வெற்றி பெறவில்லை. பின் அமெரிக்கா சென்று தன் முயற்சியைத் தொடர்ந்தார். 1941 ஆம் ஆண்டு பிரிட்ஜ்போட் என்ற இடத்தில் ஹெலிகாப்டரை பறக்க செய்தார். அதன் ராணுவ முக்கியத்துவத்தை உணர்ந்த அமெரிக்க அரசு அவர் அறிவியல் ஆற்றலைப் பயன்படுத்த விரும்பியது. அவர் அமெரிக்க ராணுவத்திற்காக எக்ஸ் ஆர்-4 என்ற பெயரில் ஹெலிகாப்டரை வடிவமைத்துக் கொடுத்தார்.

உலகப் போர்களின் விளைவாக தந்தி, தொலைபேசி ஆகிய துறைகளில் மாபெரும் முன்னேற்றம் ஏற்ப்பட்டது. கம்பியில்லாத் தொலைபேசியின் பயன்களும் முழுமையாகத் தெரிந்து கொள்ளப்பட்டு அவைகளின் செயல் திறனை அதிகரிக்க ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஒலி விளக்கப் பரிசோதனைகள் மூலம் எதிரிகளின் வெவ்வேறு விதமான விமானங்கள், நீர் மூழ்கிக் கப்பல்கள் ஆகியவற்றைக் கண்டுபிடிக்க ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன. போர்களின் விளைவாக அறுவை சிகிச்சை முறையில் மாபெரும் முன்னேற்றம் ஏற்பட்டது. தொடை எலும்பு முறிவினால் இறப்பது என்பது சதவீதத்திலிருந்து இருபது சதவீதமாகக் குறைக்கப்பட்டது. மேலும் எலும்பு முறிவினால் நிரந்தர ஊனம் ஏற்படுவதும் வெகுவாகக் குறைக்கப்பட்டது.

முதல் உலகப்போரில் நச்சு வாயுக்கள் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டன.1914இல் இப்ராஸ் என்ற இடத்தில் குளோரின் வாயுவை எதிரிகள் மீது பிரயோகித்தார்கள். பிரெஞ்சுக்காரர்கள் நச்சு வாயுக் குண்டை எதிரிகள் மீது பயன்படுத்தினார்கள்.மேலும் கண்ணைக் குருடாக்கும் வாயும் பயன்படுத்தப்பட்டது. இவைகளில் இருந்து பாதுகாப்பு பெறுவதற்காக ஆராய்ச்சிகள் செய்யப்பட்டு நச்சு வாயுக்கெதிரான கவசங்கள் தயாரிக்கப்பட்டன. மேலும் இரண்டாவது உலகப்போர் அணு சக்தி ஆராய்ச்சிக்கும் அதிக ஊக்கம் அளித்தது. அதன் விளைவாக செய்யப்பட்டதுதான் அணுகுண்டு ஆகும். இது போரின் போது

உபயோகப்படுத்தப்பட்டு ஜப்பானில் பேரழிவை ஏற்படுத்தியது. அதன்பின் மேலும் அணுசக்தி பற்றிய ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அமெரிக்கா ரஷியா ஆகிய வல்லரசுகள் ஏவுகணைகளை மேலும் மேம்படுத்தி விண்வெளி யுகத்தை தொடங்கி வைத்தனர். முதல் உலகப் போரின்போது துரித செய்தி போக்குவரத்திற்கு வானொலி அறிவியல் நுட்பங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டன எதிரிகள் அறியாத வண்ணம் ரகசியமாக விரைவில் செய்தி அனுப்பும் தொழில்நுட்பங்கள் கண்டுபிடிப்பதில் ஆயிரக்கணக்கானோர் ஈடுபடுத்தப்பட்டனர். ஆனால் தொலைக்காட்சி ஒரு பொழுதுபோக்கு சாதனமாக கருதப்பட்டதால் அதன் கண்டுபிடிப்பு சற்று தாமதமானது.

## 10.3 ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற விஞ்ஞானியாக விளங்கியவர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் ஆவார். விஞ்ஞான உலகில் பெரும் புரட்சியை உண்டு பண்ணிய சார்புக் கொள்கையை நிறுவியவர் இவர். ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் 1879 ஆம் ஆண்டு மார்ச் 14 ஆம் தேதி ஜெர்மனியில் உள்ள உல்ம் நகரில் ஒரு யூத குடும்பத்தில் பிறந்தார். அவரது தந்தை, ஹெர்மன் ஐன்ஸ்டீன் ஒரு விற்பனையாளர் மற்றும் அவரது தாயார் பவுலின் கோச் ஒரு இல்லத்தரசி ஆவார். முனிச்சில் உள்ள கத்தோலிக்க தொடக்கப் பள்ளியில் தனது ஆரம்பக் கல்வியைப் பெற்றார். பள்ளியில், அவர் ஒரு விதிவிலக்கான புத்திசாலி மாணவர் இல்லை. கணிதம் தவிர, எல்லா பாடங்களிலும் அவர் பலவீனமாக இருந்தார். அவரது தந்தை சில தொழில் காரணங்களுக்காக முனிச்சை விட்டு வெளியேறி மிலனில் குடியேறினார். ஐன்ஸ்டீன் தனது டிப்ளோமா பெற முனிச்சில் உள்ள பள்ளியில் தங்கினார், ஆனால் ஆறு மாதங்களுக்குப் பிறகு அவர் தாங்க முடியாத கல்வி முறைக்கு எதிரான போராட்டத்தை கைவிட்டு மிலனில் தனது பெற்றோருடன் சேர்ந்தார்.

ஐன்ஸ்டீன் இயற்பியல் படிக்க முடிவு செய்து, சுவிஸ் ஃபெடரல் பாலிடெக்னிக் பள்ளியில் சேர சூரிச் சென்றார். இருப்பினும், அவர் நுழைவுத் தேர்வில் தகுதி பெறத் தவறியதால், டிப்ளமோவை முடிக்க முனிச்சில் உள்ள பள்ளிக்குச் செல்ல வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. பின்னர் அவர் சூரிச்சில் உள்ள ஃபெடரல் பாலிடெக்னிக்கில் அனுமதி

